FIRST EDITION JULY 1945 

1. கண்ணனும் காந்தாரியும்

2. மாற்றாந்தாய்

* 3. கிழியும்

* சென்னை அகில இந்திய வானொலி நிலையத்தில் ஒலிபரப்பப்பட்டது.



PROF. K. N. SUNDARESAN B. A. (HONS.

# கண்ணனும் காந்தாரியும்

காந்தாரி : இங்கே யார் வருகிறது? நான் அமைதி தேடி இங்கே வந்தேன், என்னைத் தனியே விடுங்கள்! — ஒரு வேளை, நரியோ — நானும் இறந்த பிணம் என்று கருதி வருகிறதோ,—இப்பொழுது திரும்பிப் போகிறது போலிருக்கிறது.

கண்ணன் : தாயே, நான் உனக்கு சாந்தியளிக்கவே வந்திருக்கிறேன். கண் திறந்து என்னைப் பார்!

கா : ஏமாற்றுக்காரன்! நான் உன்னை முன்னால் பார்த்ததில்லை. இப்பொழுதும் கண்ணைத் திறந்து நீ யார் என்று தெரிந்துகொள்ள அவசியமில்லை, நீ யார்?

க : இந்த மண்மீதிலே சிதறிக் கிடக்கும் பிணங்களையும், தவிடு பொடியாய் நொறுங்கிக் கிடக்கும் பொருள்களையும் பார்க்கமுடியாத வண்ணம் உன்னைக் காப்பாற்றிய கடவுளுக்கு நீ வந்தனமே கூறவேண்டும்!

கா : இது கிருஷ்ணன்தான்! பசுக்களைப் பாலிக்கும் கிருஷ்ணனில்லை, ஆனால் அந்த—

க: ஆறுதலளிக்கும் தூதன்!

கா: சாபமிடும் மிடுக்குத் தூதன்! சகோதரர்களுக்குள் வெட்டி மடியும் இந்த கோர யுத்தத்தின் கொடுமைகள் தோன்றமல் உன் நாவினல் தடுத்திருக்கலாம். ஆனல் நீயோ சங்கநாதஞ் செய்து பகைமையே மூட்டினை. என் புத்திரர்களைத் தொலைத்தனை. அராஜக தூதனே! இப்பொழுது தனியே தளர்ந்து விழும் எனக்கு என்ன செய்தி கொணர்ந்துள்ளாய்?

க: உனது நாயகன் துக்கத்தில் ஆழ்ந்திருக்கிறன். உனது வீரச் சாந்தியுடன் நீ வந்து, அவனுக்குத் தேறுதல் கூறி அவனுடைய புண்ணை ஆற்று! வா!

கா: அவர் சிறிது நேரம் தம்மைத் தனியே விட்டு விட்டுப் போகச் சொன்னர் — அதனல் தான் நான் வந்தேன். நீ அங்கே போ. வீரம் மிகுந்த நூற்று வரைப் பெற்ற தந்தை, ஒரு கோழையின் துருப்பிடித்த கத்திக்கு இரையாக மரிக்காமல் பார்த்துக் கொள். அந்தோ! பழமை மிக்க குரு வம்சம்—காடும் மலையும் தாண்டி, கடல் மடை திறந்ததுபோல் ஓடி வந்து — அந்தோ! அந்த ராஜ வம்சத்தின் உதிரம் இப்பொழுது பசையறக் காய்ந்த பாலைவன மணலின் பாய்ந்து மறையவேண்டும்?

க: கண்களைத் திறந்து பார்க்கக் கூடாதென்று ஆதி முதல் நீ மூடியிட்டு மறைத்துக் கொண்டிருப்ப

தால் நல்ல வேளையாக, உன்னைச் சுற்றிலும் சித றிக்கிடக்கும் இந்தப் பயங்கரங்களை நீ கண்டு துயரப்படாமலிருக்க முடிகிறது!

கா : ஆனால் செவிகளின் மூலம் கண்களும் விழிப்படைகின் றன. அந்தகாரம் கனமாயும் அதிகக் கருமையாயும் இருப்பதற்குத் தக்கபடி நட்சத்திரங்கள் அதிகமாய்ப் பிரகாசிக்கவே, என் கன்னிப் பருவத்தில் நான் நட்சத்திரங்களைப் பார்த்திருக்கிறேன். கண்ணா! இப்பொழுது விடியற்காலம், கீழ்த் திசையில் செவ்வொளி பரவுவதால் என் கண் இருளும் சிவக்கிறது — ஆனால் தேரேறி வரும் கதிரவனை வெற்றி கீதமும் வேத பாராயணமும் வரவேற்பதற்கில்லை-நரிகளும், ஓநாய்களும், பருந்துகளும், கழுகுக ளும் கர்ண கடூரமாக ஊளையிட்டும் கூவியும், கோரமான நித்திய நித்திரையில் வீழ்ந்துவிட்ட என் பாரதக் குழந்தைகளை தாலாட்டுபவே!

க : குழந்தைகளா? தாயே, அவர்களை உலகம் விறல் வீரர் என்று போற்றுகிறது. அவர்கள் போர்க்களத்தில் கண்ணியமாகப் போராடினார் கள்—உன் மடியில் புகுந்து ஒளிந்துகிடக்க வில்லையே!

கா : ஐயா, எப்பொழுதுமே அவர்கள் என் மடியி லேயே இருந்திருக்கலாகாதா! எல்லாம் உன் வேலை கிருஷ்ணா! நீ சமாதானத் தூதனாக வந்தாய், ஆனால் உன் உள்ளம் முன்னதாகவே யுத்தத்திற்குத் தயாராக இருந்தது! உள்ளங் தளர்ந்து, பச்சாத்

தாபத்துடன் பரிதவித்துக்கொண்டிருந்த அர்ஜு-னன் கையிலிருந்து காண்டீபம் தளர்ந்து விழுந்த பொழுது, மனிதக் காடுகளை அரிந்து தள்ளும் இந்தப் பயங்கரமான கொலைத் தொழிலைச்செய்து முடிக்கும்படி அவன் தளர்ந்த கையைத் திண்ணியதாக உயரச் செய்ததுதான் உன் கடமையோ? உன் ரதத்தைத் திருப்பிக் கொண்டு போவதற்கென்ன? ........ஏ பார்த்த சாரதி! போர் முனையில் எதிர்த்து நின்ற இரு பக்கத்தாரும் சமாதானமாய்ப் போகட்டுமென்று நீ ஏன் ரதத்தைத் திருப்பிக்கொண்டு செல்லவில்லை?

க: அப்படிச் செய்திருந்தால் என் தலையில் எத்தகைய சாபம் வந்து விழுந்திருக்கும்! தெய்வங்களெல்லாம் சேர்ந்து கூட அந்தச் சாபத்தைத் தாங்கியிருக்க முடியாது!

கா: எல்லோரும் நீ கடவுளென்றும், இந்த அநித்தியமான பூமியில் அவதரிக்கிறாயென்றும், சொல்லுகிறார்களே. நான் அந்த வதந்தியை எப்பொழுதுமே நம்பியதில்லை, இந்தப் பாரதப் போரில் நீ நடந்துகொண்ட மோச முறையைக் கண்டபின் இனி எப்பொழுதுமே அப்படி நம்பவும் முடியாது!

க: நான் ஒரு மனிதன்தான், நானும் அநித்தியமான ஒரு ஜீவன்தான். என்னைத் தொட்டுப் பார், தாயே -- இரண்டு கைகள்தான், நான்கு கைகளில்லை!

[அவள் வலக் கரத்தை எடுத்துத் தன் இரு புஜங்களையும் தொட்டுக் காட்டுகிறான்.]

கா: ஆம், ஆம்! ஒரு மானிடன்தான், ஒரு சாபத்தால் உன்னை நசுக்கிவிடமுடியும்! அநீதியிழைக்கப்பட்ட ஒரு தாயின் கொலைச் சாபத்தால்!

க: தாயே, உன் இஷ்டம்போல் என்னைச் சபித்திடு; ஆனால் வீரம் மிக்க காந்தாரியின் இன்னிசை இதழ்களிலிருந்து ஒரு சாபமும் வெளி வராதென்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!

கா: ஆனால் இயற்கையின் சட்டங்களையும் தப்பி விடலாம் என்று நீ எண்ணுகிறாயா? பதினெட்டு நாள் —இரவும் பகலும்— இந்தக் குருக்ஷேத்திரத்தில் நிகழ்ந்த பயங்கரங்கள் எல்லாம் உன் நாட்டில், உன் யாதவ மக்களிடை கலகமாகப் பரிணமிக்காதென்று எண்ணுகிறாயோ? என் அரண்மனையில் மாதர்கள் கதறுவதுபோல் உன் நாட்டுப் பெண்டிரும் சோகத்தில் நொந்து சாம்பிக் கதறுவார்கள்—தீமை விளைத்த தீரனே! நீ இதிலிருந்து எப்படித் தப்ப முடியும்?

க: இதற்குள் உன் இதழ்களிலிருந்து ஒரு சாபம் வெளி வந்து விட்டதே! பவளம்போன்ற இதழ்கள் என்று எண்ணினேன், இல்லை, உதிரம் போன்ற இதழ்கள்!

கா: இதிலிருந்து முப்பத்தாறாவது வருஷத்தில், துவாரகையில் உன் யாதவர்கள் துரதிர்ஷ்டம் பிடித்து, தங்களுக்குள்ளே போராடி அங்கும் ஒரு குரு க்ஷேத்திரத்தை ஏற்படுத்துவர், பார்! உனது உற்றாரும் உறவினரும் தம் வாளாயுதங்களே பழிவாங்க மடிவர். நீயும் தனியே மடிவாய்! காதில் விழுகிறதா?

க: அப்படியானால் இருக்கட்டும்! அன்னையே! இத்தனை சாபத்தையும் கண்ணீரையும் கக்கிய பிறகாவது உன் உள்ளம் ஆறுதலடையட்டும்! ஏ, காந்தாரி! நீ சுகமாயிருக்க வேண்டும்.

கா: வெட்கங்கெட்ட கண்ணா! என்னை இதற்கு வாழ்த்தவா செய்கிறாய்? எனக்கே அவமானமாய் இருக்கிறது. பாண்டவர்கள், என் செல்வக்குழந்தைகளைக் கொலைசெய்து விட்டார்கள். அவர்களைப் பற்றிநான் ஏதேனும் நிந்தித்தேனு! தெய்வம் என் வாயை அடைத்து விடட்டும்! ஆனால் அவர்கள் அடைந்த இந்த வெற்றி என்ன வெற்றி! சுடர் விட்டுப் பிரகாசிக்கும் சூரியனைக் கருமேகங்கள் சூழ்ந்து மறைத்தது போன்ற வெற்றி. வெற்றியடைந்த பின் வெற்றியைக் கொண்டாடவும் சக்தியில்லாமற் செய்த வெற்றி—லக்ஷ தீபங்களும் தோரணங்களும் கொண்டு கொண்டாடத்தகாத, குழப்பமே மிக்க வெற்றி! ஜெயமடைந்தவர் ஆனந்தக் கண்ணீரும், மாண்டொழிந்தவர் உதிரமும் கலந்தோடும் வெற்றி.

க: மேக மண்டலங்கள் சூழ்ந்தால் தானே உலகம் மழையை எதிர்பார்த்து வரவேற்கிறது! தாயே, இடிகுரல் கேட்டுத்தானே மயிலினம் களிகொண்டு, பலவண்ணச் சிம்மாசனத்தில் கொலுவிருப்பது போல், தோகை விரித்தாடுகின்றது?

கா: மயிலா? அது எங்கே இருக்கிறது? கோபுரத்திலிருந்து கழுகுகளும் ராஜாளிகளுமல்லவா கத்துகின்றன? மயில் சிம்மாசனத்திலிருந்து ஓடிவிட்டது. ராஜாளிகள் புனிதக்கோபுரத்தில் அமர்ந்து கொக்கரிக்கின்றன—தம் பைசாசக் கண்களால் இரைதேடிப் பார்க்கின்றன!

க: என்னைச் சபித்தாய், காந்தாரி! நான் கோபங் கொள்ளவில்லை. ஆனால் பாண்டவர்களை ராஜாளிகள் என்று சொல்லாதே.

கா: என் மக்கள்தான் மயில்கள். ஐயோ! அவர்களுக்கேன் அப ஜயம் வந்தது?

க: அவர்கள் தோல்வியை எதிர்கொண்டழைத்தார்கள்!

கா: ஞானமும் போதமும் அவர்களுக்காகப் போராடினவே! துரோணனோ?

க: துரோணர் ஞானத்தையும் போதத்தையும் விற்பனையல்லவா செய்தார்? செல்வம் மிகுந்த சீடர்களை ரொம்பப் பேணினார்—,

கா: [கண்ணன் வாய்க்கு நேராகக் கையைத்தூக்கி] காது செவிடு படும்படி என்ன பிதற்றுகிறது உன் நாக்கு?— அதை வெளியே பிடுங்கி எறிவேன்—உன் நாக்கை———.

க: (சிறிது பொறுத்து) அம்மா....மந்தமான பையனிடந்தான் குரு அதிகக் கவலை செலுத்துவார்— மாண்புமிக்க துரோணர் உன் மைந்தனுக்குத் தம் அறிவுப் பொக்கிஷத்தைக் கொடுத்தார்!

கா: என் மைந்தனு மந்தன்?

க: துரோணன் அவனுக்கு அறிவை அள்ளிக் கொடுத்தார் என்று நான் சொல்லவில்லையா, தாயே?

கா: கர்ணனுக்கு என்ன! வரையாது கொடுக்கும் வள்ளன்மைக் கவசம் பூண்ட மைந்தன்! — இருந்தாலும்......

க: வள்ளன்மை ஹிருதயத்தையும் கைகளையும் திறந்து காட்டி விடுகிறது — கவசத்தில் ஒரு ஓட்டை! பகைவனின் அம்பு பாய்ந்து அவனைக் கீழே தள்ளிவிடுகிறது!

கா: ஏ கிருஷ்ணு! கர்ணனின் வள்ளன்மை என் துரியோதனனுடைய வள்ளன்மையிடம் பிச்சைவாங்க வேண்டும்! துரியோதனன் தேர்ப்பாகனைத் தூக்கி அங்க நாட்டின் சிம்மாசனத்தில் வைத்தவனல்லவா!

க: கர்ணனைப்பற்றி நான் மேலும் சொல்லட்டுமா? வெளியில் எங்கும் பரவிவரும் கதையை நீ கேட்டிருக்கிறாயா?

கா: அவன் காட்டிக்கொடுத்தான் என்றால் நான் ஆச்சரியப்படமாட்டேன். ஆனால் தவமும், தியாகமும் என் மக்கள் பக்கந்தானே போராடின? பீஷ்மன் எப்படி வீழ்ந்தான்—அவனும் காட்டிக்கொடுத்தானா?

க: வஞ்சனைகளைப்பற்றிப் பேசவேண்டாம், தாயே! உங்கள் துணைவர்கள் விஸ்வாஸத்துடன் தானிருந்தார்கள். பூமியுள் புதையுண்டோரைப்பற்றி நாம் அவதூறு பேசவேண்டாம். வயது முதிர்ந்த கிழம்—பண்டை நாளில் எத்தனை எத்தனையோ மாறுதல்களைக்கண்டது—மேற்கொண்டு மாறுதலை விரும்பவில்லை! கல்லறையை பக்கத்தில் கண்டதும், தானே ஓடிச்சென்று உள்ளே விழுந்து விட்டது!—உன் மக்களும் அத்துடன் வீழ்ந்து விட்டனர்!

கா: கிழத்தோடு சேர்ந்ததாலா தோற்றனர்? அந்தோ! அது எனக்கு முன்பே தெரியாதே! பட்டுப்போன அந்த விழுதை மரத்திலிருந்து முன்பே வெட்டியிருந்தால் மரம்அனைத்தும் பிழைத்திருக்குமோ? ஐயோ! (உரக்க அழுகிறாள்)

க: அம்மா, அழாதே! உன் கண்ணீரைத் துடைப்பதைத்தவிர நான் வேறு என்ன செய்யமுடியும்? ஆனால் கண்ணீர் வெளியே வழிவதேயில்லை—

கண்களைச் சுற்றிக் கட்டிய நுரைபோன்ற மெல்லிய துணி அதை உறிஞ்சிவிடுகிறது. நீர் ஊற்று கண்ணிலேயே மறைந்துவிடுகிறது!

கா: கைகளை எடு, அயோக்கியா! அடே போக்கிரி! என்னைத் தீண்டாதே! என் சாபத்தை வாங்கிக் கொண்டு தொலை!

க: அன்னையே, நான் போகிறேன். உன் சாபத்திலிருந்து நான் தப்பாமல் ஏற்றுக்கொள்வது உனக்கு இன்பமளிக்குமானல், அப்படியே அதை வரவேற்கிறேன். யாதொரு ஆட்சேபமுமின்றிச் சந்தோஷமாய் ஏற்கிறேன். புனித நீரை அர்க்கியமாக ஊற்றி அத்துடன் அந்தச் சாபத்தையும் தாரைவார்த்துவிடு! கொஞ்சம் இரு, ஒரு கிண்ணத்தில் தண்ணீர் கொண்டுவருகிறேன்!

கா: நான் இங்கு தங்கமாட்டேன் — எங்கேனும் தொலை! என்னை மறுபடி வந்து பாராதே!

[ஓடுகிறுள்]

க: (அவளைத் தொடர்ந்து ஓடிக்கொண்டு) அப்படியானல், இதோ இருக்கிறது, கொதிக்கும் தண்ணீர்! (அவள் கண்களில் கட்டப்பட்டிருந்த துணியின் முடிச்சை அவிழ்க்கிறுன்)

கா: பாவீ! படுபாவீ! வாழ்நாள் முழுதும் பாதுகாத்து வந்த என் கற்பைக் கறைப்படுத்திய கொடியா! மாண்டவர் போக ஜீவித்திருக்கும்

என் அன்பான ஓர் உயிருக்கும் துரோகியாகினே யே!

க: உன் சாபத்தைத் திரும்பச் சொல்லு, தாயே! உன் கண்ணீரை இதோ கை நிறைய ஏந்திவிட் டேன்--சாபத்தை மீண்டும் சொல்லிக் கண்ணை விழித்து உன் இனிய சாபக் கண்ணீரை நான் பருகுவதைப் பார்!

கா: ஒரு சாபம் மட்டுமா? சபித்துக்கொண்டே இருப்பேன்! [அவள் கண் இமைகளைத் திறக்கி ருள்]

க: சொல்லு சாபம்!

கா: என்ன இது? கட்டவிழ்த்தாகிவிட்டது, இமை கள் திறந்திருக்கின்றன — ஆனல் ஒன்றுமே தெரியவில்லையே!

க: ஆச்சரியம்! உன் கண்ணில் கருமணிகளைக் காணேன்! நாம் நிற்கும் இந்தப் போர்க்களம் அதில் பிரதிபலிக்கக் காணேன்! வாஸ்தவத்தி லேயே நீ குருடா?

கா: ஆம், அப்படித்தான் இருக்கிறேன். இந்த ஏமாற்றுக் காரியான காந்தாரியைப் பற்றி உல கம் என்ன நினைக்கும்? குருடி குருடனை விவா ஹம் செய்துகொண்டாள்! கிருஷ்ணு, நான் கன்னியாயிருந்த பொழுது குருடாக இருக்க வில்லை. நக்ஷத்திரங்களும் மலர்களும் கண்டு

களித்துள்ளேன். நீ தெய்வந்தான் போலிருக்கிறது. என் கண்களை என்ன மாயம் செய்துவிட்டாய்! [இமைகளை நன்றாகத் திறந்துகொண்டு] கட்டில்லாமலே இப்பொழுது நான் குருடாயிருக்கிறேனே!

க: தெய்வம் உனக்குக் கண்களைக் கொடுத்தது. நீ அவற்றை மறுத்தாய், அவற்றை துர்விநியோகம் செய்தாய். அவைகள் போய்விட்டன! இப்பொழுது அதற்காக வருந்துகிறாயா?

கா: ஒரு நாளுமில்லை. எனக்கு இனிமேல் துணியால் கண்களைக் கட்டவேண்டியதேயில்லை; கண்கள் சுயமாகவே தெரியாமலிருக்கின்றன! நல்லவேளை என் விழிகள் ஒளியில் மலரா மொக்குகளாகவே இருக்கட்டும். என்னை நிரந்தரக் குருடியாக்கி விடு!

க: [புன்னகை புரிந்து] நீ விரும்புகிறபடியே இருக்கும், கவலை வேண்டாம்.

கா: [சிந்தனையிலாழ்ந்து] இந்தப் பயங்கரமான கொலைகளுக்கெல்லாம் காரணம் இப்பொழுது எனக்குப் புலப்படுகிறாப் போல் தோன்றுகிறது................

க: சொல், நானும் அறியட்டும்...........

கா: நான் நிச்சயப்படுத்த முடியவில்லை—என்னைச் சற்று தனியே விட்டுப்போ.

க: இதற்கெல்லாம் காரணம் திருதராஷ்டிரர்தான் என்று எண்ணுகிருயா? அவர் தம் மக்களிடமும் சேனைகளிடமும் இளக்கம் காட்டாமல் மிகவும் கண்டிப்பாக இருந்திருக்க வேண்டுமென்று எண்ணுகிருயா?

கா: அவரையேன் குற்றம் சொல்லுகிருய்?

க: அவர்தான் இந்தப் பதினெட்டு நாள் இரத்தப் பெருக்கிற்கும் காரணம் என்று சிலர் சொல்லுகிருர்கள். சாரதி குருடாயிருந்து, குதிரைகளும் அடங்கா முரடுகளாயிருந்தால்.........

கா: எனது நாதரை—பிரபுவை—நீ இவ்வாறு நிந்திக்கலாகுமா? அவருடைய அடியாளாகவும் பத்தினியாகவும் இருப்பதில் பெருமை கொண்டுள்ள என் முன்பா இப்படிப் பேசுகிருய்?

க: பின், காரணம் என்ன என்றுதான் நினைக்கிருய்? ராஜவம்சத்தின் உதிரம் கட்டாரிகளிலும், கத்திகளிலும், வாள்களிலும் பூசப்படத்தான் வேண்டுமென்று பிறப்பிலிருந்தே சாபத்தீடா?

கா: அந்தோ! ஒருவர் கழுத்தை ஒருவர் நெரிக்கத்தானே வீரமும் பலமும் பயன்பட வேண்டும்? அவர்கள் எல்லோரும் கை கோத்துக் கொண்டு உழைத்தால் நமது பாரத வர்ஷத்தை இந்திர போகங்களோடு கூடிய இன்னொரு ஸ்வர்க்கமாகச் செய்திருக்க மாட்டார்களா? ஐயோ, என் அருமை மக்களே! இடையீடில்லாத துன்பப் படுகுழியில் என்னைத் தள்ளி

விட்டு நீங்கள் யாவருமே மடியவேண்டுமா? ஒவ்வொரு நாள் காலையிலும், என் ஆசீர்வாதத்தைப் பெற்று, எவ்வளவு வேகமாகப் போர்க்களத்திற்குப் பாய்ந்தோடினீர்கள்? அந்தோ! என் உள்ளம் கல்லினும் கடினமாய் இருந்திருக்க வேண்டும்!—இல்லாவிடில் 'தர்மமே ஜயம்'! என்று அவர்களை வாழ்த்தி இருப்பேனே! நான் அவர்களுக்குத் தாயாக இருக்கவில்லை. அவர்களுக்கு யமனாக வாய்த்தேன். என் செல்வ மக்களை நான் காப்பாற்றி இருக்கக் கூடாதா, பாவி!

க: உனது பவித்திரமான ஆசை, உன் கண்கள் அவிந்ததிலும் உன் மக்கள் பட்டதிலும் நிறைவேறி விட்டது!

கா: ஆஹா! கடைசியாக நான் தானா காரணம்? அவர்களைப் பெற்றெடுத்த தாயா? பாவி எனக்கு எது வேண்டுமாயினும் வரட்டும்! என் பதிக்காகத் தியாகம் செய்தேன்! ஓ! என் மக்களுக்காக நான் ஒரு தவமும் செய்தேனில்லையே! தாய்க் கவனிப்பு இல்லாமலன்றோ, என் மக்கள்..........

# மாற்றாந்தாய்

## நாடக பாத்திரங்கள்

| | | | |
|---|---|---|---|
| கமலம் | (வயது 13) | கல்கத்தாவில் வேலை பார்க்கும் சீதாராமையரின் புதல்வி | முதல் மனைவியின் மக்கள். |
| கிட்டு | (வயது 8) | கமலத்தின் தம்பி. | |
| குந்தளம் | (வயது 16) | சீதாராமையரின் இரண்டாம் மனைவி—புதிதாக மணந்தவள். | |
| ரங்கன் | (வயது 21) | சீதாராமையரின் நண்பர். கோதண்டராமையரின் புதல்வன். | |
| எச்சு | (வயது 45) | குந்தளத்தின் தாய். | |

[இரவு 8 மணி. ஒரு ரயில்வே ப்ளாட்பாரம். முன் பாதி தரை. பின் பாதி மூன்றாம் வகுப்புப் பெண்டிர் வண்டி. இடதுபுறம் கதவு உளது, ஆனால் கண்ணுக்குத் தெரிவதில்லை. தெரிகின்ற ஆறு சன்னல்களில் இடது நான்கு மூடப்பட்டுள்ளன, வலதுபுற இரண்டே திறந்துள்ளன. வலதுபுறம் கார்டு வண்டி தெரிகிறது; அதனைப் பெண்டிர் வண்டியோடு இணைக்கும் இடைவெளியும் இவ்வலதிலே காண்கிறோம். இரண்டு பெண்கள் முகம் சாளரங்களில் தெரிகிறது.]

ஒருத்தி: யாரோ போகிறார்களாம் கல்கத்தாவுக்கு, யாரோ வந்து சாதம் கொடுக்கணும் என்று அவர்களுக்கு என்ன? யாரும் வரவில்லை, போய் படுப்போம் வா, கமலம்.

கமலம்: வந்திருப்பர்; வந்தவர், மூன்று மணி லேட் என்று வீட்டிற்குத் திரும்பி இருக்கலாம். எழுதினால் வராமலிருப்பார்களா? நானே போட்டேன் தபாலில் மாமா எழுதிய கடிதத்தை.

ஒரு குரல்: எனக்கும் இடம் விடு, குந்தளம்.

கமலம்: கிட்டு, நான் எத்தனை தரம் சொல்லியிருக்கிறேன், பேர் சொல்லி அழைக்கக் கூடாதென்று. சித்தி என்று அழைக்கணும்.

குந்தளம்: அவளைப் பாரு, கிட்டு, (கிட்டு முகம் தோன்றுகிறது) வா, உட்கார்.
(இடம் விடுகிறாள்) என்னை அம்மா என்று பாராட்டச் சொல்கிறேனா கிட்டு?
ஜாக்கிரதை, விழுந்து விடுவாய், எட்டிப் பார்க்காதே வெளியில்.

கிட்: எஞ்சினியர் மாமா வரவில்லை?

கம: நீ நன்கு உட்கார்ந்து கொள் இங்கே.........
(பின்புறமாக நகர்ந்து கொள்கிறாள்)

குந்: எஞ்சின்காரன் என்ன தூங்குகிறானா பாவி, இத்தனை நேரம் வண்டி காக்கிறது!

(இடதிருந்து ரங்கன் தரையில் நடந்துவருகிறான்)

ரங்கன்: மாமி, இந்த வண்டியில் கமலம் போகிறாளோ?

குந்: எஞ்சினியரா நீங்கள்?

கம: (தலையை நீட்டி) உங்களுக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தோம்.

ரங்: என் முகம் அடையாளம் தெரிகிறதோ?

கம: மறந்துவிடுமா? அம்மா செத்துப் போய், சென்னைக்குப் போகும்போது இட்டிலி காபி கொண்டுவந்தீர்களல்லவா, மூக்கைப் பிடிக்க அன்று நாங்கள் தின்றது நினைவு போகுமா?

ரங்: இதை வாங்கிக் கொள்ளுங்கள் (கையிலுள்ள சாப்பாட்டு அடுக்கையும், இலைச்சுருளையும் நீட்டி) இவை ......... மென்னைப் பிடிக்கும்!

குந்: மூச்சைப் பிடித்தாலும் சாவுதான், மென்னைப் பிடித்தாலும் சாவுதான்!
(சிரிக்கிறாள்)

ரங்: யார் இந்தப் பையன்?

கம: என் தம்பி. அவள்தான் சித்தி.

ரங்: சித்தியும் கூட வருவது தெரியும். தம்பி வருவதாகக் கடிதம் குறிக்கவில்லையே............சாதம் போதாதோ என்னமோ?

குந்: (எழுந்து) அப்பாவைப் பார்க்கணும் என்று வீம்பாக அழுதான். மாமாவிடம் இருக்க மறுத்து விட்டான். செலவு பதினைந்து ரூபாய் வைத்து விட்டான் டிக்கெட்டுக்கு.

ரங்: வண்டி புறப்பட்டுவிடும்......சாதத்தை உங்கள் அடுக்குகளுக்குள் மாற்றிக்கொள்ளுங்கள்.

குந்: நாங்கள் அடுக்குக் கொண்டுவரவில்லை... கமலம்! இலையை விரித்து சாதத்தைப் போடு. ஏன் நிற்கிறாய், வண்டி ஊதிவிடும்..........

ரங்: இந்த அடுக்கு என்னுடையதில்லை, கடன்; பத்திரமாய் திருப்பணும், சீக்கிரம்.
மாமி, நீங்களும் போங்கள்...........

குந்: அவளுக்குத் தெரியாதா இதெல்லாம்?

கம: வாடா கிட்டு, சாப்பிட! (மறைகிறாள் அடுக்குடன்)

ரங்: (சிறிது தயங்கி) கூட்டமில்லை தெரிகிறது சௌகரியமாயிருக்கா பயணம்? துணை யாருமில்லையா?

குந்: எங்கம்மாவும் போகிறாள். தூங்கிக்கொண்டிருக்கிறாள், பாவம்!......

வயிற்றுக்கு ஒன்றுமில்லை.........அம்மா! (உரக்க) அம்மா!....ஐயோ, போட்டானே, பாவி! (இடது ஜன்னற்பலகை திடுமென விழுகிறது) போச்சு, விரல்!

கிட்: நானில்லேடி!

குந்: பின் யாரு....உன் தலே! (தலேயில் ஓங்கிக் குட்டு கிருள்) அம்மாடி, விரல் நசுங்கிப் போச்சே..........

கிட்: விரல் நசுங்கினுல், அந்தக் கையாலே குட்ட முடியுமாடி, பிசாசே?

எச்சி குரல்: அவன் நாக்கை அறு! எங்கேடி, எந்த விரல்?

குந்: இடது சுண்டு விரல்!

ரங்: ரத்தம் வருகிறதா? மெல்ல அமுக்கிக் கொடுங்கள்!

குந்: ரத்தமில்லே......விர்விர்ரென்று தெறிக்கிறது. (ஜன்னல் விழுந்த ஓசையால் தூக்கம் கலேந்த எச்சு தோன்றுகிருள்)

எச்சு: போடுகிறேன் பாரு நானும்! (கிட்டு முது கில் போடுகிருள்)

ரங்: கிட்டு, நீ சமத்தாயிருக்க வேண்டாமோ? இதோ, மறந்து விட்டேன்.......
இந்த சோப்பைக் கொண்டுபோய் கொடு அக்கா ளுக்கு. கை அழுக்கா இருக்கும் — அலம்பிக் கொண்டபின் சாதத்தைத் தொடட்டும்.

கிட்: (வாங்கிக் கொண்டு) அக்கா, இதோ சோப்பு— வாசனேச் சோப்பு ஒன்று......(மறைகிருன்)

குந்: புதிசா? பரிசாகவோ?

ரங்: பழசுதான். ஒரு துண்டு கொண்டுவந்தேன்.... பயணத்தில் கரியும் அழுக்கும் படும்.......

எச்சு: பாருங்கள் அந்த ஓட்டனை, எப்படியிருக்கிறான்? ஒரு நிமிஷம் சும்மா இருப்பதில்லை, சதா விஷமம் தான்.......கூண்டில் விட்ட சிங்கம் போல்....

ரங்: பின் என்ன பாட்டி? இருபது மணி நேரம் ஒரே வண்டியில் முழு அகல இடத்தில் முடங்கிக் கிடக்கமுடியுமா ஒரு சிறுவன்?

எச்சு: அவன் சட்டையையும் வேஷ்டியையும் பாரு... ......வலி எப்படியடி இருக்கு?

குந்: பொறுத்துக்கொண்டிருப்பதால், பொறுக்க முடிகிறது போலிருக்கு.

ரங்: கிட்டுவைச் சொல்கிறீர்களே........நானும்தான் அப்படி. சென்னையிலிருந்து வந்து இறங்கினேன். அப்பா ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். "என்னடா ரங்கா, இப்படி ஓட்டன்போல்!" என்று சிரித்தார். "எஞ்சினியர் பிள்ளை என்று பெரர்சு சொல்லிக் கொண்டு எஞ்சினை நான்தான் ஓட்டிவந்தேன். அதனால்தான் அப்பா, துணியும் முகமும் கரியழுக்கு" என்றேன்.

குந்: எஞ்சின் ஓட்டத் தெரியுமோ உங்களுக்கு?

ரங்: ஓட்டவிட்டால், வண்டியோடு நீங்கள் எல்லோரும் சாகவேண்டியதுதான். (சிரிக்கிறான்)

குந்: செத்தால் போகிறது................உயிரென்னவெல்லமா?

கிட்: (தோன்றி) கூஜாவில் தண்ணீர் ஆகிவிட்டது, மாமா.

ரங்: கொடு, கொண்டுவருகிறேன்.

எச்: நிறைய இருந்ததே...........கொட்டியாச்சா கழுதையே!

கிட்: அக்கா கை கழுவிக்கொண்டாள்.

ரங்: நான் போய் கொண்டு வருகிறேன், குழாய் கிட்டத்தானிருக்கு............

எச்: சாப்பாட்டுக்கு முன் கையலம்பிக் கொண்டாலும், அவ்வளவு ஜலமுமா!............

ரங்: சோப்புக் கையல்லவா? நாற்றம் போகணுமல்லவா?

குந்: நாற்ற சோப்புதானா? வாசனைச் சோப்பல்ல? (சிரிக்கிறாள்)

எச்: தண்ணீர் இறைத்துக் கொட்டுவதிலேயே குந்தளம் சாகப்போகிறாள்.

கிட்: கல்கத்தாவில் கிணறு ஏது, பாட்டி?

எச்: அதென்னவோ, செத்துப் போனவள் மகராசி ........இந்த விஷமங்களால் குத்தும் பிடுங்கும் படாமல் கண் மூடிவிட்டாள், இவள் தலையில் கட்டிவிட்டு........

ரங்: (வருத்தத்துடன்) அம்பி கிட்டு! சமத்தாயிருக் கணும் நீ. (கூஜாவை வாங்கிக்கொண்டு) பாரு, மாமி கையில் காயம் பட்டு விட்டது.

கிட்: படவேயில்லை, பொய். மாய அழுகை!

ரங்: கிட்டு, வாயை மூடமாட்டாய்? (இடதில் போகிருன் குழாய்க்கு)

எச்: ஏண்டி சும்மாயிருக்கே........வை, மொத்து.

குந்: குழந்தையோடு என்ன அக்கப் போர்? எல்லாம் பழகிவிடும் நாளாக நாளாக. இப்பொழுதுதான் இரண்டு நாளாகிறது, என்னைப் பார்த்துப்பழகி. கலியாணமும் ஒரே நாள். அவன் வரவேயில்லை நம்மிடம் அப்பொழுது.

எச்: எத்தனை தரம் கெஞ்சிக் கூப்பிட்டோம். ரொம்ப செல்லம் கொடுக்கிருய் நீ.

குந்: கிட்டு, போய் சாப்பிடு போ.

எச்: நீயும் வா, உனக்கும் பசி.

குந்: அவர் கொண்டுவரட்டும் நீர்....எஞ்சினியர் பிள்ளையா, ஏண்டி கமலம்!

கம குரல்: ஆமாம், பி. எல். பாஸ் பண்ணியிருக்கிறாராம்.

எச்: அவனுடன் என்ன பேச்சு உனக்கு........நாளை கிரகப்பிரவேசம் நடக்கப்போகிற பெண்ணுக்கு? வா, உள்ளே. (மெல்ல)
இந்தக் குட்டிகள் ஏதாவது சொல்லிவைக்கும் அப்பனிடம்.

குந்: அன்போடு சாதம் கொண்டுவந்திருக்கிறார், ஊமைபோல் வாங்கி வாயில் கொட்டிக் கொள்வதா? வண்டி நகரட்டும், பிறகு சாப்பிடலாம்.

கம: (தோன்றி) கூஜா வரவில்லை இன்னும்?

கிட்: அதோ.......வந்துவிட்டார், தெரிகிறது பார்!

எச்: கிட்டத்தான் குழாய் இருக்கிறது போலும்.

குந்: போய்க் குளித்துவிட்டு வரணும் என்றால் போ! கூட்டமேயில்லை ஏனோ?
சின்ன ஊர்தான் போலும்.

கம: குழாய் இருப்பதால், பெரிய ஊர்தான். வண்டியும் இத்தனை நேரம் நிற்கிறது. (கையிலுள்ள அடுக்குகளை வெளியில் நீட்டுகிறாள். ரங்கன் இடதிருந்து கூஜாவுடன் வருகிறான்)

ரங்: இந்தா!

குந்: வண்டி இன்னும் நிற்குமோ? (கூஜாவை வாங்கிக்கொண்டு)

ரங்: எதிர் வண்டிக்காகக் காத்திருக்கிறது.

எச்: ஆனால், குழாய்க்குப் போய்விட்டு வருகிறேன்.

ரங்: பயமின்றிப் போகலாம்..

எச்: குந்தளம், உள்ளே போ. சாதத்தை விரித்திருக்கு இலையிலே......பலாப்பழம் விற்கிறதா டாப்பா? (வண்டிக்குள், கூஜாவுடன் மறைகிருள். கதவுப்புறம் சென்று தரையிலிறங்குகிருள். அது தெரிவதில்லை நமக்கு)

குந்: (எழுந்து கொண்டு) சீக்கிரம் அம்மா! (ரங்கனைப் பார்த்து) கொய்யாப்பழம் விற்கிறதோ? (மறைகிருள்)

கிட்: அஞ்சிப் பழம் எனக்கு, மாமா!

கம: அஞ்சி ஏதடா......சிறுமலைப்பழ வாசனை, அது.

கிட்: இல்லை, அஞ்சிதான்.

ரங்: கமலம், கையில் பருக்கையாயிருக்கிறதே....... அலம்பிக் கொள்.

கம: தண்ணீர் செலவானுல் சீறி விழுகிருர்கள்....இப்பொழுதோ............சாப்பிடப் போகிறேம்...........

ரங்: மூவருக்கும் போதுமா சாதம்?

கம: சாப்பிட்ட பின்தான் சொல்ல முடியும். (சிரிக்கிருள்)

ரங்: அம்பி, அக்காளைப் பார். போன ஸ்டேஷனில் தான் வண்டி ஏறினுப்போல் பாவாடையும் மேலாக்கும், உடம்பும் முகமும் பளிச்சென சுத்தமாயிருக்கிருள்....நீயோ.......

3140



கிட்: அவள் வெள்ளைவெளேர் உடம்பில் தெரிய வில்லை.

ரங்: வெள்ளையில்தான் பளிச்செனத் தெரியும் கரி யழுக்கு........உட்காரு............

கம: நீங்கள் நிற்கிறீரே.

ரங்: நான் உட்கார, வண்டிக்குள் வரணும். பெண் கள் வண்டியில் கால்வைக்கக் கூடாதே........உன் புடவை ஒன்று கொடு, சுற்றிக்கொண்டு வருகி றேன். (சிரிக்கிருன்)

கிட்: நான் இருக்கிறேனே.

ரங்: எத்தனை வயது உனக்கு? என்ன படிக்கிருய்?

கம: எட்டு வயதாகிறது....இரண்டாம் கிளாசுதான். (உட்காருகிருள்)

ரங்: ஏன் அப்படி? என் தம்பிக்கும் வயது எட்டு தான், ஐந்தாம் வகுப்புப் படிக்கிருனே!

கம: கல்கத்தாவும், சென்னையும், கோயமுத்தூரு மாக மாறி மாறி மாறி அப்பாவிடமோ, மாமா விடமோ, அம்மாவிடமோ இருக்க நேரிட்டது. படிப்புக் கெட்டுவிட்டது.

கிட்: எல்லாரும் எனக்கு விரோதம்தான்!

ரங்: உன் படிப்பு கெடவில்லையே, கமலா?

கம: எனதும் தான். நான் எட்டாவது படிக்கிறேன். என் தோழிகள் பத்தாவதிற்கு ஏறிவிட்டனர் சிலர்!

ரங்: பிசுக்குப்பிசுக் கென்று சாதப் பருக்கை கையில் எத்தனை நேரம் பொறுப்பது? (திடுமென தனது அங்கவஸ்திரத்தை எடுத்து, வெளியில் தொங் கும் அவள் விரல்களையும் கையையும் அதில் துடைக்கிறான்)

கம: சீச்சீ! ஜரிகைப் பட்டு அங்கவஸ்திரத்திலா?

ரங்: கத்தாதே கமலம். பத்து, தீட்டு என்று ஏசுவர் அவர்கள். (சிரிக்கிறான், துடைத்துக் கொண்டே) கிட்டு, இந்தக் கடிதத்தை. உங்களப்பா சீதாரா மய்யரிடம் கொடுப்பாயா?

கிட்: ஆகட்டும்! எங்கே..........

ரங்: இந்தா! (பையிலிருந்து எடுத்துக்கிட்டு பையில் செருகுகையில்) பத்திரம், வீழுந்துவிடப் போ கிறது. தவறி இழுந்துவிட்டால் என் உயிர் நிலைக்காது. (சிரிக்கிறான்)

கம: என்னிடம் கொடுடா கிட்டு, பெட்டியில் வைக் கிறேன்.

கிட்: மாட்டேன்........இதோ பத்திரமாக நான்........

ரங்: சரி. கல்கத்தாவுக்குப் போய் பள்ளிக்கூடம் சேரப் போகிறீர்களா? (ஊது கேட்கிறது)

கம: இவன் சேருவான், நான் மாட்டேன்!

ரங்: ஏன், வயதாய்விட்டதோ? கலியாணமாகிவிட்டதோ? (சிரிக்கிறான்)

கம: சீச்சீ! எங்கே பாட்டி இன்னும் வரவில்லை.... ஊதிவிட்டானே!

ரங்: இன்னும் நேரமிருக்கிறது; அது முதல் ஊது.

கிட்: ஆனால் மாமா, அனசிப் பழம் வாங்கி வாருங்கள்.

கம: வாயை மூடமாட்டாய்? அனசி வாசனை இவன் மூக்கிற்குள் எப்படி நுழைந்தது.

ரங்: உனக்கு சிறுமலைப்பழ மணம் எப்படியோ, அப்படி! (சிரித்து) உன் சித்திக்குக் கொய்யா மணம்! பாட்டிக்குப் பலா மணம்! நால்வர்க்கும் நாலுவிதமும் தருகிறேன். (தனது பையில் கை போட)

கிட்: நாலுமிருக்கா, எங்கே, எனக்கு நாலும் வேணும்.

ரங்: காசிக்குப் போய் கங்காஸ்நானத்துப் பின், நீங்கள் நால்வரும் இந்த நால்கு ஆசைக்கனிகளையும் முறையே, தொடுவதில்லை இனி, என்று கையடித்துக் கொடுங்கள், தருகிறேன்.

கம: அது எப்படி முடியும்? மலைப்பழம் என்றால் எனக்கு உயிர்!

ரங்: ஆனால் நானும் இதுதான் செய்யமுடியும். (திடுக்கென கையை எடுத்து கமலத்தின் கூந் தலில் ஏதோ செருகுகிறான்)

கிட்: காசு! காசு! எனக்குக் காசு! எனக்கு!

கம: போடா, மடையா. மனோரஞ்சிதப் பூவுடா. எல் லோரையும் ஏமாற்றி மயக்குகிறது. பலாபோல், அனசிபோல், கொய்யாபோல்,........

கிட்: சித்திக்கு? பாட்டிக்கு? வேண்டாமா? பூவில் லையா வேறே?

ரங்: அவர்களுக்கும் நான் பூ கொணர்ந்தால் உலகம் சிரிக்காதா....அம்பி தலையோ, மொட்டைத் தலை-- கோபிக்கமாட்டான்.

கிட்: உன் தலையுந்தான் மொட்டை. நானும்...(கம லம் கூந்தலிலிருந்து எடுத்து) என் பையில் போட்டுக் கொள்கிறேன்... ...

ரங்: கடிதத்திற்கு வாசனையூட்டவோ? சரி! (சிரிக்கி றான்)

கம: கிட்டு! என் தலையிலிட்ட பூவை எடுக்கலாமா நீ?

குந்-குரல்: நான் அடித்தால்தானே குற்றம், நீ போடு குட்டு!

கி: சரி, இந்தா........(கூந்தலில் வைக்கப்போக)

கம: (கன்னத்தைத் தொட்டுக் கொஞ்சி) அம்மா! தன்றே சமர்த்து! (செருகிக்கொள்கிறாள்)

குஞ்-குரல்: கமலம், தொட்டுக்கொள்ளக் கறியில் ........ஏதாவது உரப்பாக பக்ஷணம் கிடைக்குமா என்று கேட்டுப் பார்!

ரங்: கறி வைக்கவில்லை? மறந்துவிட்டார்களா என்ன?

கம: ஊறுகாய், கறி இரண்டுமிருக்கு. (அடுக்கைக் கொடுத்து) கெட்டியாய்ப் பிடித்து கொள்ளுங்கள்.

குஞ்-குரல்: கறியுமில்லை, காயுமில்லை—வந்து பார்!

ரங்: சரி, என்ன பக்ஷணம் வேண்டும்? (அடுக்கை வாங்கிக் கொண்டு)

கிட்: தித்திப்பாக, லட்டோ, மைசூர்ப்பாகோ....

கம: தித்திப்பாக எது இருந்தாலும் சரி.

ரங்: காரமாகக் கேட்கிறாளே சித்தி.

கம: எங்களுக்குத் தித்திப்பாகத்தான் வேண்டும்.

ரங்: (தயங்கிக் கொண்டு) சரி, சங்கடத்தில் வைக்கிறீர்களே.... (திடுமென) நான் ஒன்றுமே வாங்கப் போவதில்லை. (சிரிக்கிறான்)

கிட்: நாங்கள் சண்டை போடுகிறோமென்றால் இரண்டு வகையுமன்றோ வாங்கித் தரவேண்டும், மாமா!

கம: எத்தனை பணம் வீணாக்குகிறதுடா. முட்டாளே (ரங்கனை நோக்கி) எதுவாங்கிவந்தாலும் சரி. அதோ! பாட்டி வண்டி ஏறுகிருள்.....சோப்புக்கட்டி கொடுக்க மறந்துவிட்டேனே!

(வண்டிக்குள் தோன்றுகிருள் எச்சி)

எச்: ஆமாண்டியம்மா, இந்தக் கிழவிக்குச் சோப்பு தான் பாக்கி....சாப்பிடுவதற்கு முன் கூட சவுக்காரம் போட்டு கழுவிக்கொண்டு நாத்தத்தைப் பூசிக் கொள்ளும் பெண்களை நான் கண்டதில்லை.

ரங்: மாமி, உங்களுக்கு என்ன ஆகாரம்?

எச்: பால் விற்குமோ?

ரங்: அடடா! வண்டி புறப்படும் நேரம்.......

கம: எதிர் வண்டி இன்னும் வரவில்லையே......

ரங்: விசாரித்துப் பார்க்கிறேன், கிடைத்தாலும் கிடைக்கலாம். உங்கள் கடிதத்தில் பால் வேண்டுமென்று எழுதவில்லை....ஆதலால்தான் நான்....

கிட்: பூவேண்டுமென்று எழுதியிருந்ததோ?

ரங்: பாட்டி, இந்த ஊரில் இறங்கிவிட்டுப் போங்களேன். இராத்திரி ஆகாரம் பண்ணிக்கொண்டு, நாளைக்கு இதே வண்டியில் போகலாம்.

கம: இருபத்திநாலு மணி நேரம் நிற்குமா இங்கே இந்த வண்டி—தெரியாதே, முன்னாலே ஏன் சொல்லவில்லை. (சிரிக்கிருள்)

எச்: திரும்பிவரும், இதே வண்டி—கல்கத்தாவிலிருந்து நாளைக்கு, அதில் ஊருக்குச் செல்கிறுயாப்பா ?

ரங்: கேலி பண்ணுகிறீர்கள் என்னை. பட்டினியாய்ப் போவது உடம்புக்கு ஆகாது என்று சொன்னேன்.........

குந்: (தோன்றி, அருகில் உட்கார்ந்து) ஆமாம், அம்மா, கிட்டுவுக்கும் வெறுத்துவிட்டது இந்த நெடும்பயணம்; இறங்கிவிடலாம். என்ன கமலம் ?

கம: நான் தயார்தான். முன்னுலேயே இவர் கட்டாயப்படுத்துவர் என்றுதான் இருந்தேன்........... சரி, இறங்கலாயா ? (ஊது கேட்கிறது)

எச்: அதோ, ஊதிவிட்டான்.

கிட்: சீக்கிரம் இறக்கணும் சாமான்களை !

குந்: ஆமா, தூக்கு, எழுந்திரு.

எச்: பைத்தியம் பிடித்திருக்கா, குந்தளம்? நாளைக்கு புதன்கிழமை--கல்கத்தா சேர்ந்தால்தானே, மறு நாள் கிரகப் பிரவேசத்திற்குச் சரியாயிருக்கும்.

ரங்: எத்தனை மணிக்கு முகூர்த்தம் வியாழக்கிழமை ?

குந்: காலை பத்து மணிக்காம்,

ரங்: இந்த வண்டி காலை ஆறு மணிக்கே அங்கு போய் விடுகிறதே. தாராளமாய் இங்கு இறங்கிப் போக லாம். சம்மந்தி வீட்டில் நாலுநாள் முன்னு லேயே ஏன் குந்திக் கொள்ளணும்? நான் சீதா ராமையருக்குத் தந்தி கொடுத்துவிடுகிறேன்.

எச்: (கோபமாய்) வெட்கக் கேடு. நீங்கள் இறங்கிக் கொள்ளுங்கள். எதிர் வண்டியில் விழுந்து நான் சாகிறேன், நான் இறங்குவது அப்படி விழத் தான். நானும் இறங்குகிறேன், அந்தப் பக்கம்! இறங்குங்கள் நீங்கள், இந்தப் பக்கம். (மறைகி ருள்)

ரங்: உங்களுக்காகத்தானே இறங்கச் சொல்கிறேன். நீங்கள் இறங்காவிடில்......எதற்கு.........

குந்: இந்த ஊரையும் பார்க்கலாமே.

எச்-குரல்: கல்கத்தாவைப் பார்க்கப் போகிறவளுக்கு இது ஒரு ஊரா? வாயை மூடடி.

குந்: சரி, அடிமைதானே, நான் வாயை மூடிவிட் டேன். (பத்து விரல்களாலும் மூடிக்கொள்ள)

கம: தின்பதற்குத் திறக்கலாம், வாருங்கள். (குந் தளத்தின் இடது கையைப்பற்றி இழுத்து) எழடா, கிட்டு.

ரங்: பால் கொண்டுவருகிறேன்....(இடதில்போகிருன்)

குந்: கூட்டமே இல்லை இன்று. நாளை வண்டியில் செறிந்தால் என் செய்வது? நல்லதுதான் இறங் காதது-மடிகட்டிக் கொள், அம்மா சீக்கிரம்.

எச்-குரல்: இதன்ரே சமர்த்துப் பெண். "அழைத்து வா" "அழைத்து வா" என்று கடிதம் மேல் கடிதம் மாப்பிள்ளை போட்டு, நாலு ஐந்து தவணை தவறி, கடைசியில் புறப்பட்டிருக்கிரும்; புரட்டாசி மாசம்கூட பார்க்காமல்--நடுவழியில் இறங்குவதாவது?

குந்: தெலுங்கர் எப்படி வாழ்கின்றனர் என்று பார்க்க ஆசையாயிருந்தது. தெலுங்கச் சுமங்கலிகள் கூட வெள்ளை உடுத்துகிருர்கள் என்கிருள் கமலம்.

எச்-குரல்: உனக்கும் உடுத்திக் கொள்ளணும் என்று ஆசையா, அசடே.

குந்: போன ஜோந்திரையில் உடுத்தவில்லையா நான்?

கம: புதுச் சட்டசபைப் பிராமணிகள்--வெள்ளை தான் அணிகிருர்களாமே, ஆனல் மஞ்சள்தான் வெள்ளையாய்த் தெரிகிறது பத்திரிகைப் படத்தில் என்கிறேன் நான்.

எச்-குரல்: அதெல்லாம் எதற்கு நமக்கு?

குந்: எனக்கு வேண்டும். என் தலையில் எழுதித்தானிருக்கு.

எச்-குரல்: ஏன், ஏன்?

குந்: (அழுகுரலொடு) உனக்குத் தெரியாமலா? பாசாங்கு செய்கிருய்!

எச்-குரல்: பாசாங்குக்காரியா நான்? ஏண்டி கமலம், உங்கப்பாவுக்கு வயசு எத்தனேடி இப்பொழுது?

கம: எனக்குத் தெரியாது.

எச்-குரல்: கிட்டு, உனக்குத் தெரியுமாடா?

கிட்: எனக்கெப்படித் தெரியும்?

எச்-குரல்: ஒன்றும் தெரியாது உங்களுக்கு! பாவம்! எல்லாம் கமலத்தின் சூது! சம்பளம், வேலை, சொத்து ஒன்றும் தெரியாது உனக்கு!
குந்: உனக்கும் தெரியாமல்தான் தள்ளியிருக்கிறாய்! என்னை, தூரதேசத்தில். போகும் வழி நெடுக நரகவேதனை; நரகவேதனை அங்கும் காத்திருக்கிறது.

எச்-குரல்: நரகமா? தெலுங்கு தேசத்தை நரகம் என்றவாய், ஏன் இங்கே இறங்கணும் என்று பிதற்றிற்று? கமலம் சீமந்த புத்திரியாம். பன்னிரண்டு வயது இப்போது......சீதாராமனுக்கு அப்போது வயது பதினெட்டு என்றால்..............

குந்: பதினெட்டு வயதில் பிறந்தாளா இவள்?

எச்-குரல்: அந்தக் காலத்தில் கலியாணம் சுருக்கு.
குந்: ஆமாம். ஒருநாள் கலியாணம் என்றவைத்தியமும் கிடையாது அப்போ, பொய்யடிக்காதேயம்மா.

எச்-குரல்: ஐந்துநாள்தான், சிறு வயதில் கலியாணம். ஆகையால் உன் கணவருக்கு வயது முப்பதாகிறது இப்போது, அவ்வளவுதான். உனக்கும் பதினாறு.

கம: பதினொன்கு என்றீர்களே.

எச்-குரல்: ஒளித்து வைத்தோம் கொஞ்சம். உனக்கு என்னடி குந்தளம் — மஞ்சளும் குங்குமமும் கெட்டி உனக்கு, சம்பளம் ரூ. 160. இந்த காலத்தில் திண்டாடுகிறார்கள், படிச்சு பாஸ் பண்ணினவர்கள்.

குந்: இவர் என்ன பாஸ் பண்ணியிருக்கிறார், கமலம்?

கம: அப்பாதானே—மெட்ரிக்குலேஷன் தேறவில்லையாம்.

குந்: இல்லை..........நமக்குச் சாப்பாடு கொணர்ந்திருக்கிறாரே, அவர் பெயரென்ன? ரங்கன்?

கம: பெயர் எனக்குத் தெரியாது – உனக்கெப்படித் தெரியும்.........பி. எல் தேறியிருக்கிறாராம்.

("ரங்கா! ரங்கா!" என்று கூக்குரல்)

கம: ரங்கன்தான் போலிருக்கு பெயர்! அதோ......

ர-குரல்: வந்துவிட்டேன், வந்துவிட்டேன்!

கம: இவர் பெயர் ரங்கன் அல்ல—குரல் கேட்கிறது அங்கே, வருகிறார் இவர் இங்கே.

(ரங்கன் இடதிருந்து ஓடோடி வருகிறான்)

ரங்: இந்தாருங்கள்!

கிட்: (கை நீட்டி) நாலு பேருக்கு, நாலு பொட்டணம்.

ரங்: ஆம். கையிலிருந்த காசெல்லாம் போட்டு வாங்கியிருக்கிறேன்.

கிட்: வக்கீல் சம்பாத்தியம் இவ்வளவுதானா?

ரங்: அட பயலே, நான் வக்கீல் என்று யார் சொன்னு உனக்கு?

கம: பி. எல். பாஸ் பண்ணியாச்சு என்றுல் போர்டு தொங்கவிடவேண்டியதுதானே.

ரங்: நான் இன்னும் எப். எல். கூட பாஸ்பண்ண வில்லே.

கம: வக்கீலுக்குப் படிக்கிருன் என்றுரே அப்பா.

ரங்: ஆம், தேறவில்லே, எப். எல். நாலு நாளில் செப்டம்பர் பரீக்ஷைக்குப் போகணும் சென்னேக்கு. பொட்டணம் பத்திரம்.

கம: நிஜமா? நிஜமாத் தேறவில்லேயா? பொய், பொய். (சிரிக்கிருள்)

ரங்: மெய்தான், தேறவில்லே.

கம: இருக்காது, இருக்காது. நான் நம்பவே மாட்டேன்.

எச்-குரல்: ஏண்டியம்மா? பெயிலாய்ப்போகிறவர்கள் எத்தனேயோபேர்கள்; அதனுல் வெட்கமென்ன, இழிவென்ன?

ரங்: வெட்கந்தான் எனக்கும்.

எச்-குரல்: வெட்கமென்ன? குந்தளத்தை முதல் தாரமாகத்தான் கொடுப்பேன் என்று அவள் அப்பாவும் நானும் வீம்பாக நின்ருேம். முடிந்ததா? இரண்டாம் மனேவியாக இருக்கிருள்.

ரங்: அதனால் என்ன? முதல் மனைவி உயிருடன் இருந்தால்தானே தொல்லையும், சள்ளையும். குறைவு என்ன இப்பொழுது?

எச்-குரல்: ஒரு குறைவும் இல்லை. சம்பளக்காரன்—கொட்டாப்புள்ளி — சாண்டோ போலுள்ளான். மனதைத் தேற்றிக் கொள், குந்தளம்.

கம: மறுபடியும் பரீக்ஷைக்குக் கட்டியிருக்கிறீரா?

ரங்: கட்டியிருக்கிறேன். பாஸாகுமோ என்னமோ சந்தேகம்!

குந்: எனக்குத்தான் பெயில் என்றால் பெயில்—மறு கலியாணம் கிடையாது பெண்டுகளுக்கு. உங்களுக்கென்ன பாஸாக?

ரங்: போவதில் எல்லாமே வெற்றியா? பாலுக்குத் தேடினேன். பால் கிடைத்ததா, கிடைக்கவில்லையே.

கிட்: (இதுவரையில் ஒரு பொட்டணத்தை தின்று கொண்டு இருந்தவன் மற்றொன்றைத் திறந்து) என்ன, எல்லா பொட்டணமும் ஒன்றேதானா?

ரங்: ஆம், (சிரிக்கிறான்)

கம: என்ன, ரங்கா என்று அலறுகிறது ஒரு கிளி, எங்கிருந்தோ!

ரங்: என்னைத்தான் கூப்பிடுகிறார் ஒரு நண்பர். முதல் வகுப்பு மெத்தை வண்டியில்தான், தான் சட்ட சபைக்குப் பயணம் போகிறது வழக்கம் என்று

எனக்குக் காட்டிக் கொள்ள.......போய் வருகி றேன். ஒரு நொடியில்........

கம: சரி, போய்வருகிறோம், நீங்கள் திரும்பி வருமுன் வண்டி நகர்ந்துவிடும், அடுக்கு பத்திரம்.

ரங்: பத்திரத்திற்குத்தான் கீழ்வைக்காமல், கையி லேயே வைத்துக்கொண்டு திரிகிறேன். (மறை கையில்)

கிட்: சமையற்காரன்போலே.

ரங்: ஆம், கடிதம் பத்திரம்! (மறைகிறான்)

குந்: இங்கே இறங்கும் யோசனை என்னாயிற்று?

எச்: (வேறு உலர்ந்த புடவை அணிந்து தோன்றி) இந்த செப்பினால் நெற்றி விடுவேன் உன் தலையை.

கம. பால் கிடைக்கவில்லையே, நீங்கள் பட்டினியே என்று கேட்டாள் சித்தி. ஏன் கோபம், பாட்டி? கடிதத்தைக் கொடுடா கிட்டு....எங்கே? (அவன் பையில் கை போடுகிறாள்)

குந்: நீ நெற்ற வேண்டாம், நீராட்ட வேண்டாம், நெருப்பிடவேண்டாம். எங்கே காட்டு கடி தத்தை.

கம: அப்பாவுக்குத்தான் (படிக்கிறாள் உறையை)

குந்: (பிடுங்கிக்கொண்டு) பேரைத்தான் சொல்லக் கூடாது நான்--பேரைக் கண்ணால் பார்க்கக் கூடாதா?

எச்: சொன்னால்தான் என்ன, இந்த காலத்தில், இந்த வெள்ளைக்காரர் ராஜ்யத்தில்.

கிட்: பாட்டி, இந்த 1938-ஆம் வருஷம் காங்கிக் காரர் ராஜ்யம்.

குஞ்: என்ன எழுதியிருக்கோ?

எச்: படித்துப் பாரேன்!

குஞ்: இங்கிலீஷிலிருக்கும்.

கம: கதர் உடுத்தியிருக்கும்வர், தமிழிலேயேதான் எழுதியிருப்பர்.

கிட்: ஹிந்தியில் எழுதியிருக்கும். பிரிக்காதேயுங்கள். (பொட்டணத்துடன் பின் சென்று மறைகிருன்)

கம: போடா, அப்பாவுக்கு ஹிந்தி தெரியுமா?

குஞ்: பிரிப்போம்........

கம: இவரோ, இவர் தகப்பனுரோ-எழுதியிருப்பது யாரோ? நாம் பிரிக்கக்கூடாது.

எச்: பிரிக்கக்கூடாதென்று தடுத்து, ஏண்டி கமலம், கணவன் மனைவியைப் பிரிக்கிருய்? கணவன் கடிதத்தைப் படிக்க மனைவிக்கு உரிமையில்லையா?

குஞ்: அப்படிக் கேளு! அதைத்தான் கேட்டேன் நானும், (உறையைக் கிழிக்கிருள்) இரண்டு கடிதங்கள்!

கம: ஏன் இரண்டு? என்னிடம் ஒன்றைக் கொடு... இரண்டு நண்பர்கள் எழுதியுள்ளார்கள் போலும்.

குந்: (ஒன்றைக் கொடுத்துவிட்டு) இது கோதண்ட ராமய்யர் எழுதுவது....
எஞ்சினியர்தானே.........

கம: ஆம், ரங்கனுடைய அப்பா. அவருக்குத்தான் நாம் கடிதம் போட்டோம்.

(தன் கைக் கடிதத்தினைப் படிக்கிறாள் மனதிற்குள்)

குந்: எஞ்சினியர் முத்துமுத்தாக எழுதியிருக்கிறார்— கைப்பழக்கம்.

(மனதிற்குள் படிக்கிறாள்)

எச்: (மறைந்துள்ள கிட்டுவை நோக்கி) எல்லாவற்றையும் தின்னுதே. உடம்புக்கு ஆகாது. வயிற்றால் பிடுங்கிக் கொள்ளும். வண்டியிலேயே சவத்தைப் போட்டுவிட்டுப் போய்விடுவோம். (எதிரில் உட்காருகிறாள்)

கிட். குரல்: ஒவ்வொன்றிலும் கொஞ்சம்தானிருக்கு, காலணாப் பொட்டணம்போலும், தரித்திரம்!

குந்: நன்றாய்ச் சொல்லு! தரித்திரம்! தின்கிற வாய்க்கு சர்க்கரை போடு.

கம: தித்திப்புதானே தின்கிறான்!

கிட். குரல்: காரா பூந்திதான். காரம் பொறுக்க முடியவில்லை.

குந்: அம்மா, கேள் இந்தக் கடிதத்தை! (படிக்கிறாள்)
"நாலு பேருக்குக் காபி, ஐந்து பேருக்குத் தயிர்ச்சாதம் என்று எழுதிவிடுகிறீர்கள் எளிதாய்.

வரும் நாளினையும் திட்டமாய்க் குறிப்பது இல்லை. 'சனிக்கிழமை அல்லது ஞாயிற்றுக் கிழமை வருவர், இரண்டு நாளும் ரயிலடிக்குப் போகுமாறு வேண்டிக்கொள்கிறேன், தாழ்மையுடன்' என்று கிறுக்கிவிட முடிகிறது, உங்கள் முக்காலனு சாணிக்கார்டிலே! எங்கள் கஷ்டம் எங்களுக்கல்லவோ தெரியும்? ஜட்காச் செலவும், ரயில் நேரம் கழித்து வரின், ராத்தூக்கமின்மையும்....

எச்: எதைப்பற்றி இவையெல்லாம்?

குந்: ஸ்டேஷனுக்குச் சாப்பாடு தான் கொண்டுவருவதைப் பற்றி! (படிக்கிருள்):

"உம் நண்பர் குப்பண்ணு செய்தி தெரியுமா? அவர் குடும்பத்திற்காக, நீங்கள் சொல்லி இருந்தபடி, இருமுறை, இரண்டு நாட்கள் இரவு, சாப்பாடு எடுத்துச் சென்றோம். இரண்டு நாளும் வந்திலர். மூன்று நாட்கள் முன்னதாகவே கல்கத்தா வந்து சேர்ந்து விட்டதாக, ஒரு மாதம் கழித்துக் கடிதம் வந்தது! எப்படியிருக்கிறது?
குடும்பம் வந்து சேர்ந்ததும், ஒரு முக்காலணுக் கடிதம் விடுத்திருந்தால் எமக்கு வீண் பெரும் தொல்லைகள் விளைந்திராவே!
என்ன தெரிகிறது இதனுல்? யாம் கொண்டு வருகிற காப்பியும் இட்டிலியுமோ, சாதமோ உங்களுக்கு மெய்யாகவே அவசியமுமில்லை, பிடிக்கவுமில்லை போலிருக்கிறது. ஆதலால்

இனிமேல் இது போன்ற காரியங்கள்
எனக்கு வைக்கவேண்டாம். உம் மனைவி
வருவது நிச்சயமில்லை. சாப்பாடு நான்
கொண்டு போகப் போவதில்லை,
மன்னிக்கவும். முன்னாலேயே..........

எச்: எழுதினது அப்படி....ஆனால் நட்புக்கும், உலகிற்கும் அஞ்சி அனுப்பியுள்ளாரே, பார். அதன்றோ பெருந்தன்மை? இன்னும் என்ன எழுதியிருக்கு?

குந்: பெருந்தன்மையா? நீ தான் மெச்சிக்கொள்ளணும். (இன்னும் சிறிது மனத்துள் படித்தபின் கிழித்தெறிகிறாள் துண்டு நூறாக)

எச்: ஏண்டி, இப்படி? அழுகிறாயா என்ன?

குந்: (கண்களைத் துடைத்துக்கொண்டு) தின்ற கத்தரிக்காய்க் கறியை வாயாலெடுத்துவிடணும் போல் இருக்கிறது. இவர்கள் சாப்பாடு யாருக்கு வேண்டியிருக்கிறது?

கம: கறியைத் தனியே தின்றால் சுவைக்குமா உணவு? (சிரிக்கிறாள்)

குந்: அதென்ன கடிதம்?

எச்: கொடுக்காதேடி, கிழித்துவிடுவாள் அதையும்.

கம: ஆம், கொடுக்கமாட்டேன்! (மடியில் சொருகிக் கொள்ள)

குந்: (வெறிபிடித்தவள் போல்) புடவையை அவிழ்த்துவிட்டாகிலும் பிடுங்கிக் கொள்வேன். கொடுத்துவிடு நல்ல பெண்ணாய்.

கம: சரி, இந்தா. ஒன்றுதான் போயிற்று. இதையேனும் கொண்டு செல்வோம்.

குந்: (வாங்கிக் கொண்டு) இது மட்டும் எப்படி இருக்கப்போகிறது. ஒத்தாதும். (படிக்கிருள் தனக்குள்)

கம: இது ரங்கன் எழுதியது...கிட்டு, எனக்கொரு பொட்டணம் கிடையாதா?

எச்: ஏண்டா, சித்திக்கும் ஒன்று வேண்டாமா?

கிட். குரல்: காரத்தைத் தின்று கூஜா நீரையும் குடித்து என் வயிறு நிரம்பிவிட்டது. உங்களிருவருக்கும் தான் சாப்பாடிருக்கிறது போங்கள்.

குந்: (கடிதம் படித்தபின் கோபமுடன்) கேளடி அம்மா! காதற்கடிதத்திலும் பிறரை வையணுமா? (கிழித்து எறிகிருள் வெளியே)

எச்: என்னடி, காதற்கடிதமா? யாருக்கு யார்?

குந்: மனோரஞ்சிதப் பூச் சூட்டிச் கொஞ்சட்டுமே உன்னை, எனக்கென்ன? உனக்குத்தான் தலை வலிக்கும். இன்னும் கொஞ்சம் கொஞ்சச் சொன்னுல் தலைவலி போய்விடும், என்னை ஏன் வையணும்?

கம: என்ன வசவு இருக்கிறது அதிலே? தலை வலி வருமா இந்தப் பூவினுல்?

குந்: "மாற்ருந்தாய்க் கொடுமைக்கு இடம் பிறவா வாறு, விரைவில் மணம் முடித்துக் கமலத்தை

வேறு வீட்டிற்கு அனுப்பின், அவளுடன் அவள் தம்பியும் இருக்கலாம்," என்று யோசனை கூறுவது, வசையல்லவா? (அழுகிருள்)

கம: தான் மணக்கவிரும்பும் ஆர்வத்தில் இப்படி எழுதிவிட்டார். அதற்காகக் கோவிப்பதா? அதோ, வந்துவிட்டார், அவருக்குத் தெரியப் போகிறது.

எச்: வரட்டும், சொல்கிறேன். முதற் கடிதத்தில் என்ன வசவு, சொல்லவில்லையே, நீ.

(ரங்கன் இடதிருந்து வருகிருன்)

கம: (வரவேண்டாம் என்று ஜாடை செய்கிருள், வெளியில் தொங்கும் இடது கையினுல்) கிட்டு! கிட்டு!

ரங்: (அவள் குறிப்பை உணராமல்) வண்டி புறப்பட இன்னும் நேரம் இருக்கிறது. எதிர் வண்டிக்காகக் காக்கவில்லையாம்; எனது நண்பர் மோட்டாரை ஏற்றியிருக்கிற வண்டியை ஈர்த்துவர எஞ்சின் வருகிறது அந்தப் பக்கம்! (எதிர்ப் பக்கம் எஞ்சின் இடதிருந்து வலதில் போகும் பேரோசை)

குந்: (கிட்டுவை நோக்கிப் போய்க்கொண்டே) பேசிக் கொள்வதெல்லாம், பேசிக்கொள்ளுங்கள். பேசத் தெரியாவிடின் உதட்டோடு உதட்டைத் தைத்துக் கொள்ளுங்கள்!

எச்: இதெல்லாம் பேச எங்கு கற்ருயடி குந்தளம்? மனக்கசப்பா,? பொருமையா? பிசாசும் பைத்தியமும்போல்............

ரங்: இதென்ன?
கம: உங்கள் கடிதத்தைப் பார்த்துவிட்டாள்.
எச்: ஏண்டா, படிச்சுத் திரியும் தறிதலை நாயே! உன் கட்டுச் சோறு யாருக்கு வேணும், எடுத்துப் போ.

ரங்: என்ன சங்கதி? கறியில்லாததாலா?

குந்: அதைத் தின்றுதான் வாயால் கக்கிக்கொண்டிருக்கிறேன், நெருப்பு நெருப்பாய்.

ரங்: ஏன், ஏதாவது விஷம் கலந்துவிட்டாளா என்ன, சுந்தரம்?

எச்: விஷம் எல்லாம் கடிதத்தில்.

குந்: முதல் மனைவி இறந்து மூன்று மாதத்திலேயே இரண்டாம் மனைவி கிடைத்ததற்காக ஏசுகிறார்! "அவள் போலே அழகு இல்லையாமே இவள், எப்படி மணந்துகொண்டாயடா சாப்பாட்டு ராமா?" என்றெல்லாம் நீட்டுகிறாரே! நான் என்ன கருங்குரங்கா? சாகலாம், நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகலாம்.

ரங்: அவரும் என் தந்தையும் நண்பர்கள், விளையாட்டாய்ப் பேசிக்கொண்டார்கள், அவ்வளவே. அதையெல்லாம் பொருட்படுத்தலாமா?

எச்: வேண்டாமப்பா, நீ சாதத்தை எடுத்துப் போ. கோதண்டராமன் சோறு வேண்டாம், எமக்கு.

ரங்: அது எங்கள் வீட்டுச் சோறல்ல.

கம: பின் ஏது? பின் ஏது?

குந்: ஹோட்டல் சமையலும் அல்ல அது. வீட்டுச் சமையல்தான், தெரியவில்லையா?

ரங்: என் நண்பன் சுந்தரத்தின் தாயார் சமைத்தது!

குந்: பொய், பொய்.

எச்: பொய்யாயிராது. கோதண்டராமய்யர் கடிதத்தைப் படித்தாயே. சாதம் அனுப்புவதில்லை உன் குடும்பத்திற்கு என்று எழுதியிருந்தாரே.

கம: ஆமாம், ஆமாம்.

ரங்: ஆம், அம்மாவும் மறுத்தாள். வெட்கக்கேடு வெளியே சொன்னால்! என் நண்பனைக் கெஞ்சி, அவன் தாயார் சமைத்துப் பிசைந்து தம் அடுக்கில் கொடுத்த சாப்பாடு அது.

எச்: 'சாதம் கிடையாது போ' என்று எத்தனை துணிச்சலாய்க் கடிதமும் எழுதி நம்மிடமே கொடுத்தும்விட்டிருக்கிறான் இந்த எஞ்சினியர் சண்டாளன்.

ரங்: அது என் பிழை. எழுதித் தபாலில் போடச் சொன்னார் நேற்றே. ஓரணாவும் கொடுத்தார் தபாற் தலைக்கு. அதனை அப்படிச் செலவிடாமல் ப்ளாட்பாரம் டிக்கட்டு வாங்குவதற்காக அதனை வைத்துக்கொண்டு, சுந்தரம் வீட்டுச் சாதத்தைக் கொண்டுவந்தேன்.

குந்: எல்லாம், காதலி கமலத்திற்காக.

ரங்: காதலி குந்தளத்திற்காகத்தான். சீதாராமையர் சாப்பாடு கொண்டுவரச் சொல்வது, அதனை யாம் மறுப்பதா? (சிரிக்கிறான்)

குந்: காதலி குந்தளம்........யாருடைய காதலி?

எச்: எல்லாம் தெரியும் உனக்கு! (சிரிக்கிறாள்) பிள்ளையாண்டான் இவன் சிரமப்பட்டுக் கொண்டுவந்திருக்கிறான் தின்னு, வா, கமலம்! வண்டியில் ஏறுகிறார்கள் பிரயாணிகள்! சாமான்களை ஒதுக்குகிறேன். வா, குந்தளம். (மறைகிறாள்)

குந்: ஐயையோ, கூட்டமே!

ரங்: அதிகமில்லை. நாலைந்து பெண்கள்தான்.

எச்-குரல்: குந்தளம்! வா, நீயும்.

குந்: எனக்கென்ன வேண்டும்? ஏன் கூப்பிடுகிறாய் அம்மா? (மறைகிறாள்) குந்தளமும் ஒரு காதலியா?

ரங்: கிட்டு, போ, சாப்பிடு. ஏன் வருகிறாய் இங்கே?

கிட்: (தோன்றி) பக்ஷணம் தின்னாச்சு. பசிக்க வில்லை............

கம: பென்சில், பேபர் இருக்கோ உங்களிடம்?

ரங்: ஏன்? இல்லையே.

கம: எஞ்சின் திரும்புகிறது இப்பொழுதுதான், இன்னும் ஐந்து நிமிஷம் இருக்கலாம். அதற்குள் கடிதம் எழுதித்தாருங்கள், முன்போல. அதைக் கிழித்துவிட்டாள் சித்தி.

ரங்: எதை?

கம: இரண்டையும். நீங்கள் எழுதின கடிதம்போல் இன்னொன்று எழுதுங்கள், விரைவில்! (சிரிக்கிறாள்)

ரங்: அது அவருக்கு எழுதியதல்ல, உனக்குத்தான் எழுதியது. நாணம் கவிந்த என் மனத்தினை உனக்குத் தெரிவித்தற்கே. வீம்பாக இருந்து வீங்கிக் கிடப்போனைக் கரையேற்றுவாயோ? அல்லது.........வீழ்த்தி................

கம: அப்பாவுக்கும் ஒரு கடிதம் எழுதித்தாருங்கள் ........அதுவே நல்ல காரிய பாணம் என் கையில்! (சிரிக்கிறாள்) சீக்கிரம் எழுதுங்கள்...........

ரங்: வசவு என்கிறார்களே உன் சித்தியும், பாட்டியும்; அதனை நீக்கி..............

கம: ஆம். (எஞ்சின் மீண்டும் இடத்துக்குத் திரும்பும் பேரோசை)

ரங்: கிட்டு, உன் அப்பாவிடம் சொல்லக்கூடாது நீ, நான் சாதம் வேறு வீட்டிலிருந்து கொண்டுவந்தேன் என்பதாக. என்ன, சொல்லு. சமத்துப் பையன் அல்ல நீ?

கிட்: சொல்லவில்லை.

ரங்: சொல்லாதே! சொன்னால், கருமி மனுஷன் இந்த எஞ்சினியர் என்று பெண் கொடுக்கமாட்டார். பார், பையில் ஒரு அணாத்தான் இருந்தது. ப்ளாட்பாரம் டிக்கட்டு வாங்காமல் ஏமாற்றியதால், அதனைக்கொண்டு உங்களுக்கு நாலு பொட்டணம் வாங்கித் தந்தேன். பணம் கையிலில்லை. கமலத்தை எப்படிக் கேட்பது?

கம: போன தடவை, அம்மா செத்தபின் வந்தோம், அப்பொழுது காசும், தெர்மாப்ளாஸ்க்கும் நீட்டினேன், காப்பி வாங்கி வர. வீசி எறிந்தீரே காசை, என்றுதான் இந்தத் தடவை கொடுக்கவில்லை.

ரங்: அப்போது அப்படி.

கம: அதை மறக்காமல்தான்.........இப்போது........

கிட்: உங்கப்பா கருமியானாலும் நீங்கள் நல்லவர், சாப்பாடு எங்கிருந்தோ சம்பாதித்துக் கொண்டு வந்தீர் என்று அப்பா அறிந்தால் உங்களைப் பற்றி மகிழ்வாரே!

கம: பெருமைதான். சொல்லுவோம்டா!

ரங்: சரி, எப்படியோ நம் பக்கம் ஜயித்தால் சரிதான்.

கிட்: (குதித்துக் கொண்டே) சொல்லலாமல்ல?

ரங்: குதிக்காதே திடும் திடுமென. தலையில் இடித்துக்கொள்வாய்.

கம: தலைமயிர்க்குள்ளே எத்தனை காயம்! மொண்டிப்பாளையாத்து மொட்டையடித்தபோது....... தெரிந்துவிட்டன எல்லாம். எத்தனைக் கோடுகள், கீறுகள்......

ரங்: என்னடா கிட்டு, இப்படி? சித்திக்குக் கோபம் வராமல் நடந்துகொள்ளணும். அவள் மனம் ரொம்ப புண்பட்டு ஏங்குகிறது. அவள் கிணற்றில் விழுந்து தற்கொலை செய்து கொண்டு

விட்டால், உன்னைத்தான் ஜெயிலில் வைப்பார்கள். இதென்ன கன்னத்தில்? கரியா?

கம: தழும்பு! (சிரிக்கிறாள்)

ரங்: எது கிழித்தது?

கம: செய்த ரூட்டி பொறுக்கமுடியவில்லை, போன வருஷம் அம்மா போட்டாள் தலையில். உருண்டு விழுந்தான் கீழே. அப்போது நிலைகாலில் உள்ள கதவுத் தடைக் கொக்கி கிழித்துவிட்டது—கண் தப்பியது நல்ல வேளை.

ரங்: உங்கம்மாவே இப்படி அடித்திருக்கிறாள் பார், அத்தனை போக்கிரியா நீ, கிட்டு? குந்தளச் சித்தி கொஞ்சம் தொட்டாலும், மெல்லவே சொன்னாலும் உலகம் என்ன உளறும். மாற்றாந் தாய்க் கொடுமை என்றே அபவாதம் வரும் சித்திமேல். அதைவிட நரகவேதனை என்ன ஒருத்திக்கு உண்டு? சித்திமேல் பழி வராமல் காத்துக் கொள்வது நம் பொறுப்பு. அப்பா மனதும் புண்படக்கூடாது. நீ நடக்கிறவிதத்தைப் பார்த்தால், ஏது அடி, புடை, வசவு அழுகையாகத்தான் இருக்கும் போலிருக்கிறது, உங்கள் கல்கத்தா வாழ்வில். நானுயிருந்தால் விஷத்தைக் குடித்து........

கிட்: இல்லை மாமா; சமத்தாயிருக்கிறேன். கடிதத்தைக் குந்தளச் சித்திதான் கிழித்தாள் என்றும் அப்பாவிடம் நான் சொல்வதில்லை.

ரங்: இவனன்றோ நல்ல பையன். (கொஞ்சுகிறான் கிட்டு கன்னத்தைத் தொட்டு) போய் எழுதி வரு கிறேன் சீக்கிரம். ஏன் அந்த எஞ்சின் நின்று விட் டது அந்தத் தண்டவாளத்திலேயே? நல்லதாச்சு. கமலம், உன் மனதினையும் நன்கு எடுத்து எழுது கிறேன்.

எச்-குரல்: ஐயோ, இப்படியா எழுதியிருந்தது அவள் தலையில்? (குழப்பமும், கூக்குரலும், இரைச்ச லும்) குந்தளம், குந்தளம்!

ரங்: என்ன சங்கதி, பாட்டி? எங்கே சித்தி? பத்தி ரம், கூட்டம்.

கிட்: போய்ப் பார்க்கிறேன் நானும், வேடிக்கை (மறைகிறான்)

கம: யாரோ இறந்துவிட்டாள் என்று குரல் எழு கிறதே, ரயிலின் முன் விழுந்து........அதைப் பார்ப் பதற்கு சித்தி இறங்கியிருப்பாள். நாமும் போக லாமா?

எச்-குரல்: குந்தளம்! இந்த ஸ்டேஷனிலேயே இறங்கியாச்சாம்மா? (புலம்பும் குரல் கேட்கிறது)

ரங்: அவள் விரும்பியபடி நடக்கக்கூடாதா பாட்டி? இறங்கி ஊரில் தங்கி நாளைக்கே போங்கள். (இட திலும் வலதிலும் ஜனங்கள் குவிகின்றனர்) நானும் பார்க்கணும்......(ஜன்னல் வழியே வண்டிக்குள் ஏறிக் குதிக்கிறான்)

எச்: (மற்றொரு ஜன்னலில் தோன்றி) அவளுக்கு விருப்பமே இல்லை... அந்தக் கலியாணம், நான்

தான் வற்புறுத்தினேன் .... நான்தான் கொன்றேன் அவளை. எஞ்சினியர் கொல்லவில்லை, என்ஜினியர் பிள்ளையும் கொல்லவில்லை, எஞ்சினும் கொல்லவில்லை, எஞ்சினேட்டியும் கொல்லவில்லை........நான்தான்........

கிட்-குரல்: குந்தளம் தலைபோலிருக்கு...கான்ஸ்டபிள் கையில் எடுத்துக்கொண்டு போகிருன்.

எச்: உயிரை எமன் எடுத்துக்கொண்டு போகிருன். ரங்கா, உடம்பை நீ கொண்டுபோய்........

கம: பாட்டி, தண்டவாளத்திடை சித்தியை நீங்களா இழுத்துத் தள்ளினீர்கள் ?

ரங்: கண்டதெல்லாம் பிதற்ருதே கமலம்......

எச்சு: உங்கப்பன் வாயில் தள்ளிளேண்டி பாவி! காதலி குந்தளம்! ஐயோ, காதல் தனக்கு இல்லை இனி வாழ்வில் என்று சாகத் துணிந்திருக்கிருள்.......வேறு வழி ஏது அவளுக்கு!.........



# கீரியும் கிளியும்

## நாடக பாத்திரங்கள்

| | |
|---|---|
| தருமி | |
| கயற்கண்ணி | அவன் காதலி |
| பாண்டியன் | |
| நக்கீரர் | புலவர் சங்கத் தலைவர் |
| திண்ணப்பன் | காவலாள் |

### காட்சி 1.

ஒரு பூஞ்சோலை. தருமி படுத்திருக்கிறான் தரையில். கயற்கண்ணி, கையில் குடலையுடன் பூப் பறித்துக் கொண்டு வருகிறாள். படுத்திருப்போனைக் கண்டதும் திடுக்கிடுகிறாள். அவனை எழுப்புவதற்கு, மரக் கொம்பினைக் குலுக்கிச் சலசல வென்று ஓசை செய்கிறாள். எழாதது கண்டு, அருகுற்று, உற்று நோக்குகிறாள். களிப்பும் கவலையும் மாறிமாறி அவள் முகத்தில் தோன்றி மறைகின்றன.)

க: என்ன களைப்பு முகத்தில்! பாவம் —— தூங்குக இனிது——நான் கலைப்பது தவறு. நாணாமல் நாளும் நோக்கலாம் ........ (படுத்திருப்பவன் விழித்துக் கொள்கிறான் போலும், நாணத்தோடு கண்களை மறுபுறம் திருப்புகிறாள்)

தருமி: யார்? கயற்கண்ணியா? (எழுகிறான்)

க: ஆம்: (தூர விலகுகிறாள்)

த: எப்படி வந்தாய் இங்கே நீ? வா—— போகாதே.

க: நீவிர் எப்படி வந்தீர்? —— பாண்டியனுடைய காவல்மாப் பூங்காவிற்குள்? பெருங்குற்றமே?

த: நீ எங்ஙனம் வந்தாய்? நான் இங்கு போந்தது தெரிந்தோ? கடவுளருளே அருள். நாமிருவரும் மீண்டும் எதிர்ப்பட வாய்த்ததே.

க: தந்தைக்கு ஊன்று கோலாக வந்தேன்.

த: ஏன்? என்ன ஆயிற்று அவர் கால்களுக்கு?

க: சருக்கி விழுந்துவிட்டார் நேற்று, வையைத் துறையில், என்னையும் இன்று இங்கு வரச் சொன்னார், அரசர் கோயிற்குள் தன்னுடன். பூஜைக்கு பூப்பறிக்க அவரால் இயலவில்லை. நான் வந்தேன். உம்மைக் கண்டேன் இங்கே. எழுந்து ஓடிவிடவேண்டும். பாண்டியன் காணின் ஒறுப்பான். எப்படி புகுந்தீர் நீவிர்?

த: சோம்பித் திரிகிறேன். வேலையோ ஒன்றுமில்லை.

க: முகம் வாடியிருக்கிறதே, உணவு கொண்டிலீரோ. நேற்றிரவு?

த: இரண்டிரவுகளாய் இரையில்லை, புள்போல் பறப்பேனுக்கு. உடம்பு சோர்கிறது, நிற்க முடிய வில்லை. வா, உட்கார் கீழே.

க: பாண்டியன் கண்டால்? ..

ந: தனது நாட்டில் —— மீன் துள்ளும் நீர்வள நாட்டில்—இத்தகைய வறியன் உளனே என்று அறிந்து வெட்கி மாள்க! மீன் துள்ளும் துகிற் கொடி உட்கிக் கிழிக!

க: எனக்கொன்று தோன்றுகிறது. எந்தைக்குக் கால் நோய். அதே ஆதி சைவகுலமாகிய உம்மை அவருடைய பணியினைச் செய்ய அமர்த்துமாறு கூறுகிறேன் அவரிடம். ஆனால் வெட்கம் என் வாயைப் பூட்டுகிறதே. எங்ஙனம் உம் திருப் பெயரை யான் விளம்புவது தந்தையிடம்? நீங்களேபோய்த்தந்தையிடம் வேண்டிக்கொள்க. அரசனின் கோயிற் பணியில் அமர்வது எத்துணை சிறப்பு?

த: அரனார் பணியே என் குலத் தொழில்.

க: அரசன் கோயிலில் அரனார் பூசை செய்தற்கே ஊக்குகின்றேன்—அஃது இழிவல்லவே.

த: மறந்தனையே நீ. பெண் பாதியனை அர்ச்சிக்கும் அர்ச்சகன், பெண் மணந்தவனாக இருத்தல் வேண்டுமே. எனக்கு திருமணம் ஆகும் முன் என் குலத்தொழிலில புகக்கூடாதே.

க: மணந்து கொள்க (சிரிக்கிறாள்) விரும்புவது யாரை?

த: வறியன் நான் — எங்ஙனம் மனம் ஒப்புவர் உன் தந்தை, நம் திருமணத்திற்கு? தாய் தந்தை யர் தாமில்லை எனக்கு — பொருளுமில்லையே.

கவலை கனற்றுகிறது. உன் தந்தையினை எந்தத் துணிவுடன் காண்பது கேட்பது .........

க: அவரை மெல்ல இங்கு அழைத்து வருகிறேன். உம் நிலைக்குப் பரிந்து தாமே மனமிரங்கி!

த: கயற்கண்ணி, என் காதலி — நீ முயலாதிருக்கிருய். வாளா என்று அஞ்சுவேன் சிலகால். என் பசியை நான் மறப்பது உன் முகத்தை நினைந்து நினைந்தே. வந்தாய் நீ இங்கே, உன் மேனியைத் தீண்டலாகாதா நான்? (அணுக)

க: (மெல்ல விலகிக்கொண்டு) கையில் பூக்குடலை, மலர்கள் சிந்திவிடும் (கீழே வைக்கிருள்.)

த: ஏன் கூந்தலில் மலர் ஏதும் முடிக்கவில்லை நீ? கொய்து கொணர்கிறேன் சில அல்லது ... பூக்குடலையிலிருந்து எடுத்து .... (எடுக்கப் போக)

க: கடவுளுக்கென பறித்தன அவை. அவற்றையா? — கூடாது .... கூடாது .......

த: பொறு, கயற்கண்ணி. தற்போது என் காதலி கடவுளாக இருக்கிருள். புதுப்பூ கொய்வதற்கும் பிரிய ஆற்றுகிலேன். எதற்குப் பூ? [அவளுடைய கூந்தலை அவிழ்த்து] இதோ — பூ முடிந்திருக்கிருயே - [முகருகிருன்] ஆ - என்ன மணம்!

க: நேற்று என்ன முடிந்திருந்தேன் கூறுக!

(சிரிக்கிருள்)

த: (முகர்ந்து) சண்பகம்.

க: இல்லை.

த: செருந்தி.

க: இல்லை. அது மூன்று நாள் முன்

த: முல்லை

க: இல்லை. அது பத்து நாள் முன்.

த: ஞாழல்.

க: ஞாழல், இந்தப் பருவத்தில் ஏது?

த: என்றால் கூற முடியாது. உன் கூந்தலில் எல்லாம் கமழ்கின்றன. இப்பூக்களை எல்லாம் - அவ்வப் பொழுது அணிந்ததால் அனைத்து மணமும் கமழ் கிறது உன் கூந்தல். என்றால் இயம்ப இயலவில்லை. நேற்று நீ அணிந்ததை சுண்ணமும் மஞ்சளும் கலக்கச் செந்நிறக் குங்குமம் ஆவது போல் புது மணமொன்று பிறந்திருக்கிறது உன் கூந்தலில்!

க: நாள் தோறும் நீராட்டுகிறேன் கூந்தலை-பழைய மணம் எப்படித் தொத்தி நிற்கும்?

த: உன் கூந்தலுக்கு அது இயற்கையாய் விட்டது. ஆ! இதனைத்தைவரும் பேறு பெற்றேன் இப் பொழுது. அமர்வோம் சிறிது தரையில். பின்னல் பின்னி விடுகிறேன்.

க: மகளிர் கூந்தலைப் பின்னிவிடக் கற்றது நீவிர் எப்பொழுது? (சிரிக்கிறாள்)

த: கற்கவில்லை இன்னும். உன் கூந்தலின்றி எதனை.... நான் இல்லறம் நிகழ்த்துகையில்-நாள்தோறும் உனக்கு நானே - மணியும் அணியும் துகிலும்

அணிவித்து அழகு காண வேண்டும் என்று மன தில் அவாவித் திரிகிறேன்.

க: பின், பொருளீட்டும் தொழிலோ? [சிரிக்கிறாள்]

த: அது மறக்கும் பேதையோ நான்? மனையில் என் தாயோ, உன் தாயோ மற்று தோழியோ இல் லாத வறுமைக் குடிலில் நானே உன் தோழியு மன்றோ? அந்நாள் என்று வருமோ?

க: வீணை, இப்படி மனம் சுழலாமல் — மனத்தில் தோன்றுவதை .... [கூந்தலை முடி போடுகிறாள்]

த: என் மனத்தில் தோன்றுவதை?

க: செய்யுளாக்கிப் புலவர் சங்கத்திற்கு அனுப்பி னால்........குர்ரென்று ஓசை என் தலைக்குள்......

த: செய்யுள் இயற்ற முயன்றேன் - மனம் ஒரு வழி நிற்க மறுக்கிறது. சொற்கள் வெகுதூரம் அருகில் என்கின்றன. உன் தலைக்குள் சிலைக்கும் காதற் பண்ணினை நீ செய்யுளாக்கித்தா. அதனைச் சங்கத்தாரிடம் கொடுக்கிறேன்.

க: எனக்கு செய்யுளாக்கத் தெரியாதே! என்னைக் கேட்டால் .......

த: என்னாலும் இயலவில்லை. கற்பனைத் தெய்வமாய் நீ என் மனதில் வீற்றிருந்தும், பாட்டு ஒன்றே னும் முடியவில்லையே. ஆனாலும் — பயனென்ன? அரசன் கருதியது வேறு. பொற்கிழியை மண்ட பத்தில் தூக்கிக்கட்டி ஓராண்டு ஆகப்போகிறது. அவன் கருத்திற்கிணங்கிய பாடலே வரவில்லை

யாம்! அனைத்தும் பொய். அவன் கருத்து யாதென்று யாரறிவார்? ஆயிரக்கணக்காய் பாடல்கள் குவிந்துள்ளன. வாரா வாரம் சங்கம் கூடுகிறது. பாடல்களை ஆய்ந்து உரை கண்டு, குறிப்புரையுடன் அரசனுக்கு, அவ்வப் பொழுது—வாரந்தோறும் அனுப்பி விடுகின்றனர். அரசன் அவற்றைப் பார்க்கிறானோ என்னமோ? ஆயிரம் பொன் தருவோம் பொற்கிழியில் என்றது வெறும் பொய். நாட்டோர் செய்யுள் இயற்றுவதில் பழகி, இலக்கியம் சிறக்கவேண்டும்; புலவர்கள் பெருகவேண்டும்; நாட்டில் கல்வியும் கேள்வியும் மல்கியதால், உலகோர் இப் பாண்டி நாட்டினைப் புகழவேண்டும் என்ற உயர் கருத்தே அரசனுக்கு. மெய்யாகவே ஆயிரம் பொன்னை ஒருவருக்குக் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் கிடையாது அவனுக்கு. அப்படியிருக்க, செய்யுள் நான் செய்ய முயல்வதேன்? பொற்கிழியினை வெல்ல முடியாது பரிசாக.

க: அரசன் இத்தனைக் கரவுடையவனோ? மெய்யோ இது?

த: ஆம். எல்லோரும் அப்படியே பேசிக் கொள்கின்றனர். பொற்கிழியில் பொன்னும் உளதோ? யாரறிவார்? பேருக்குத் தான் நிற்கின்றனர் - காவலாளர் கிழியைக் காத்து. இரவும் பகலும், மழையிலும் வெயிலிலும்! " கிளி கொத்திக் கொண்டு போய்விட்டது கிழியை — நாம் என் செய்ய? " என்று ஒரு நாள் காவற்காரர் முறையிட்டால், முடிந்துவிடும் இந்தக் கேலிக் கூத்து.

க: என்ன சத்தம்?

த: எங்கே? (சுற்றிப் பார்த்து) யாருமில்லையே?

க: போய்விடுங்கள்! அருகில் இருக்கின்றனர் யாரோ மறைந்து...........

த: இல்லை — என் காதில் படவில்லையே.......

க: குர்குரென்று உருமுவது போல்........ (திரும்பித் திரும்பிப் பார்க்க)

த: ஒன்றுமில்லையே ........

க: (மீண்டும் சுற்றிச் சுற்றி) என்ன இது? விபரீதமாய் முடிந்துவிடும் போலிருக்கிறது–கடவுளுக்குக் குற்றம் செய்தேனோ - இங்கு காதல் பேசியதால் ?

த: என்ன கயற்கண்ணி! - பைத்தியம் பிடித்தது போல் சுழல்கிறாய் - தலையைச் சொறிகிறாய்........ (அவளருகில் சென்று அணைத்துத் தாங்கிக் கொண்டு) மெல்லப் படு, சிறிது, (கூந்தல் அவிழ்கிறது) ஆ! — ஒரு வண்டு........ புகுந்து சிக்கிக் கொண்டிருக்கிறது கூந்தலுள்.

க: என் கூந்தலிலா ?

த: அசையாமல் கிட, கொட்டிவிடும் நம்மை — நாம் அசைந்தால்! ... ஆ! — மெல்ல விடுவித்து விட்டேன் — பறந்து போய்விட்டது!

க: அதன் முரற்சியே .... அப்படி, என் தலையில். ஒரு பூவும் இல்லையே — ஏனோ வந்தது?

த: மணத்தை முகரவே.

க: மணமுள்ள இடத்தில் தேனும் இருக்கும் என்று நினைத்தனையோ? பேதை வண்டே?

த: நீயும் பேதைபோல் அதனை விளித்துப் பேசத் தொடங்கிவிட்டாயே! என்னைப் போல வண்டும் மயங்கிவிட்டது, உன் கூந்தலருகே வந்ததும். பல மணங்களும் கலந்ததால் புது மணம் — அந்தப் புது மணம் ஒரு புது மலருடையது — சாவகம், ஈழம், சீனம் என்று பல வெளி நாட்டிலிருந்து நமது வீர வாணிபர் கொணர்ந்த விந்தைச் செடியோ என்று மருண்டு விட்டது, பாவம் வண்டு! சிக்குண்டு சாகத் திரிந்தது .... இனி அறிவு வந்துவிட்டது! கவலைப்படாதே நீ! வராது இனி!

க: யாரோ வருகிறானே அங்கே!

த: நான் ஓடி விடுகிறேன்-மெல்லத்தான் வருகிறான்—ஏதோ யோசனையில் ஆழ்ந்ததுபோல்—நம்மை கவனிக்கவில்லை.

க: ஆம், ஓடிவிடுக. நானும் ....... (எழுகிறார்கள்)

த: இனி எப்பொழுது காண்போமோ?

க: தந்தையிடம் அச்சமின்றி வருக — ஒன்று தோன்றுகிறது. நாம் இப்பொழுது ஓடினால் வருபவன் நம்மைச் சந்தேகிப்பான். ஆதலால் இங்கேயே இருப்போம். புரவலனுடைய பூஞ்சோலையில், மனம்போல் உலாவ உரிமை படைத்த ...

த: தம்பதிகள் நாம் என்று அவன் நினைக்குமாறு நாம் ஒழுகுவோம். பூக்களைத் தொடுப்போம்.

(உட்கார)

க: (குடலையிலிருந்து பூக்களை எடுத்து) நுமக்கு அவை. நான் இவற்றை —!— (உட்காருகிறுள்)

த: (மாலை தொடுப்பதுபோல் பாசாங்கு செய்து) இன்னும் வேண்டும் வில்வம் (எழுகிறுள்)

ஒரு குரல்: எனக்கு மரியாதை செய்யும் கருத்துடன் எழுகிறுய் — ஆனால் வில்வம் கொணர்தற்கு போல் எழுகிறுயே ... (சிரிக்கும் சப்தம்) நான் எழுந்தேன், இவள் எழுந்தாளா? ஆதலால் நுமக்கு அஞ்சவில்லை. ஆனால் மரியாதை செய்வ தால் எமக்கு இழிவில்லை. கயற்கண்ணி எழு — (வணங்குகின்றனர்) வணங்குகிறேம் ஐய, கையில் சுவடிகள்? புலவர் பெருந்தகை என்று காண்கிறது நக்கீரரேயோ?

க: எமக்கும் புலமை நல்குக, பெரியோய்!

(புதியவன் நுழைகிறுன்)

வந்தவன்: செய்யுள் வல்லீரே நீங்களும்? நக்கீரனே நான்? (சிரிக்கிறுன்) அவர் புலமை எங்கே? நான் எங்கே? நக்கீரர் யார் என்று தெரியாத மக்களும் உளரோ இப்பதியில்!

த: அந்தச் சுவடிகள் யாவை?

வ: இன்னும் நான் பார்க்கவில்லை.

த: புலவர் சங்கம், அரசர் பிரானுக்கு அனுப்பியுள்ள பாடல்களோ?

வ: ஆம், (நகைக்கிறுன்)

த: இறைவனாரிடம் கொண்டு போகின்றீரோ? எத்தனை பாடல்கள் உள?

வ: 378 பாடல்கள்! ஒரு வாரத்திற்குள்! ஏழு நாட்களில் எப்படி குவிகின்றன, பார். (நகைக்கிறான்) நீயும் அனுப்பியுள்ளாயா?

த: இல்லை. செய்யுள் பாடத் தெரியேன் நான்.

வ: செய்யுள் வாழத்தான்? அறிஞரோலும் - உன்னாலேயே இயற்ற முடியாதாயின் - வீட்டில் - நும் முன்னோர் இயற்றியுள்ள பாடல்கள் இருப்பின்-கரையானுக்கு இரையாகி அழியுமுன் சங்கத்திற்கு அனுப்பலாம். பொற்கிழி உனக்கே கிடைப்பினும் கிடைக்கும்.

த: தேடிப் பார்க்கிறேன் என் வீட்டில்.

வ: அன்னாய், நீயும்........ (நகைத்துக் கொண்டே) பூத்தொடுக்கின்றீர்களா இங்கே - வண்டு இல்லாத இடம் பார்த்து........(மறைகிறான்)

க: தெரிந்துவிட்டது அவனுக்கு உண்மை. பிரிவோம் நாம்.

த: என் தந்தையோ, பாட்டனோ - எழுதிய பாடல்கள் இருப்பின்......ஓ, கடவுளே - (விரைந்து போகையில்) கயற்கண்ணி! உந்தைபால் கூறுகிறாயா?......இதென்ன (குனிந்து எடுக்கிறான்)

க: என்ன அது?

த: பாட்டோலை! (மனத்துள் படிக்கிறான்)

க: அந்தப் புலவர் நழுவவிட்டு விட்டார் போலும் அவரிடம் கொடுத்து விடுவோம்.

த: இராது. அடியில் குறிப்புரை ஒன்றுமில்லை. அவன் கையிலிருந்து விழுந்ததல்ல இது!

க: ஏன்? கடினமான பாட்டு என்று சங்கப் புலவர் உரை காணமுடியாமல் திகைத்திருப்பார்!

த: இதா? எத்துணை எளியது!

க: எங்கே! (அருகில் வர)

த: படிக்கிறேன். (படிக்கிறான்)

> "கொங்கு தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
> காமம் செப்பாது கண்டது மொழியுமோ!
> பயிலியது கெழீ இயநட்பின் — மயிலியல்
> செறி எயிற்று அரிவை கூந்தலின்
> நறியவும் உளவோ, நீ அறியும் பூவே?"

எளிய பாடல்! வெள்ளைப் பாடல் என்று அடிக் குறிப்பே எழுதவில்லை போலும்!

க: அத்தனை எளியதல்ல: மீண்டும் படிப்போம், காட்டுக.

த: உனக்கு விருப்பமாயின், இதோ பதவுரையும் கூறுகிறேன்.-

| | |
|---|---|
| கொங்குதேர் வாழ்க்கை | —பூந்தாதை ஆராய்ந்து உண்ணுகிற வாழ்க்கையினையும் |
| அகம் சிறைத் தும்பி | — உன்னிடத்தே சிறையையும் உடைய வண்டே! |

| | |
|---|---|
| காமம் செப்பாது | —என் நிலத்து வண்டாதலின் நான் விரும்பியதையே கூறாமல் |
| நீ அறியும் பூ | —நீ அறியும் மலர்களுள் |
| பயிலியது கெழீஇய நட்பின் | —எழுமையும் என்னோடு பயின்றுப் பொருந்திய நட்பையும் |
| மயில் இயல் | —மயில் போன்ற மென்மையையும் |
| செறி எயிறு | —நெருங்கிய பற்களையும் உடைய |
| அரிவை கூந்தலின் | —இந்த அரிவையின் கூந்தலைப் போல |
| நறியவும் | —நறுமணமுள்ள பூக்களும் |
| உளவோ | —உள்ளனவோ? |

க: ஆகா, எத்தனை அழகாய்ப் பதம் பிரித்து உரை கூறினீர்! நன்கு தெரிந்தது. தும்பி, நீ அறியும் பூக்களுள், இவள் கூந்தலைப் போல வாசனை உடையது உளவோ, என்பது பாட்டின் கருத்து போலும்.

த: இனி என் உள்ளத்தினைக் கவலையடையச் செய்யேன். உன் கூந்தலில் சிக்குண்ட வண்டின் நிகழ்ச்சியைச் சுட்டுகிறது இது. கடவுளே எனக்கு எழுதித் தந்தசெய்யுள் இது. பார், இது பொற்கிழியை வெல்லும். இறைவனே என் கண்முன் வீசி எறிந்துள்ளார் இதை. இனி நம் திருமணம் திண்ணம். நாளைக்கே பொற்கிழி எனது. (அவனை அணையப் போக)

ஒரு குரல்: கயற்கண்ணி! கயற்கண்ணி!

க: என் தந்தை! பார்த்துவிட்டார் நம்மை...........

த: நான் ஓடிவிடுகிறேன். பொற்கிழியுடன் காண்பேன் அவரை!

குரல்: அரசன் என்று மதியாமல், மரியாதைக்கு ஏழாமல்.........

த: ஐயையோ - அவனு அரசன்?

க: பெருங்குற்றம் செய்தோமே.......

த: பொன் முடியுடன் அன்றி தன் குஞ்சியொடு கண்டிலேன் - ஓ! இறைவர் ஒறுப்பரோ? அன்றி உன் தந்தை ஒறுப்பரோ?
ஓடி மறைகிருன்)

க: வருந்தி நொண்டி வாரேல் ஐய! வந்துவிட்டேன்........

(குடலையை எடுத்துக் கொண்டு ஓடி மறைகிருள்)

## காட்சி 2

(ஏழு நாள் பின்னர், சங்க மண்டபம். நக்கீரர் எழுதிக்கொண்டிருக்கிருர். வெளியே இரைச்சல் கேட்கிறது)

ந: இக்கூச்சலில் எப்படி எழுதுவது? (எழுந்து சாளர வழியே நோக்கி) யார் அது? பொற்கிழியை அறுப்பதற்கா?...........திண்ணப்பா, திண்ணப்பா! (திண்ணப்பன் நுழைகிருன்)

தி: அரசன் ஆணை. ஊர்வலத்துடன், தருமி என்ற மாணி வந்துளான்..........

ந: தருமி! அவனது பாடலா அரசன் கருத்துக்கு இணங்கியது? அவனை அழை இங்கே. தருமி யின் பாடலா?........... நினைவு வருகிறது........... (அருகில் உள்ள ஒரு சுவடிக் கட்டினை எடுக்கை யில்)

தி: சங்கத் தலைவர் உளரா என்று கேட்டான் அவ னும். இங்கு நீங்கள் நண்பகலில் — இம்முது வேனிலில் - தனியே இருப்பீர் என்று எண்ண வில்லை - அழைத்து வருகிறேன். (போகிறான்)

ந: சங்கத் தலைவர் "கொங்குண் கழற்சி"........... என்று துவக்கம் வருகிறது........ (ஒரு ஓலையைப் பொறுக்கி எடுத்து) ஆ........ (படிக்கிறார்)

**கொங்குதேர் வாழ்க்கை**
**அஞ்சிறைத் தும்பி !**
**காமம் செப்பாது கண்டது**
**மொழிமோ.........**

.............ஆனல் இறுதியில்.........உளவோ என்ற வினா, தன் விருப்பப்படியே விடை கூறும்படி கோருவதாக—நினைவு எனக்கு!........ (பார்த்து) ஆம்....இது ஒரு குற்றம் என்று ஏன் கொள்ளக் கூடாது? (சிரிக்கிறார்) "செறி இய நட்பின்........" அளபெடை எதற்கு? சொல்வன்மை இல்லை; புலவனுக்கு "அரிவை கூந்தல்!" அரிவை - முப் பதாண்டு மாதினையா மணக்கப் போகிறான், பதினாறு வயதுக் காளைக் காதலன்? (நகைக்கிறார்) பல குற்றங்கள்! வருக, தருமி! பொற்கிழி போய்

விட்டால்............ கூடாது............ கூடாது............
(யோசிக்கிறார்)

(தருமியும், திண்ணப்பனும் வருகிறார்கள்)

த: போற்றி, பெரும! (வணங்குகிறான்)

ந: பொற்கிழி உனதா ?

த: ஆம். அரசன் ஆணை. ஊர் அறிய விளம்பினான்! காண்க, அவன் ஓலையும் இதோ! சங்கத்தீர், நீங்கள் அந்தப்பாட்டினைப் பெரிதும்புகழ்ந்து, சொல்லழகு பொருளழகுகளை நெடிது விளக்கிக் குறிப்புரையும் சார்ந்து எழுதி வேந்தனுக்கு விடுத்திருந்ததால், பொற்கிழியை எனக்கு......

ந: பொற்கிழி உனக்கு அளிப்பது தகுதியன்று; திண்ணப்பா அரசனிடம் ~~கையெழுத்திட்ட~~? போய்ச் சொல்லிவிடு.

த: ஏன்? இதோ......அரசன் கையெழுத்திட்ட ஓலை, பாண்டியன் முத்திரை!

தி: மீனும்.........

ந: மீனோ, பேனோ-பிதற்றேல் என்னிடம், போய்ச் சொல்லு. சங்கத் தலைவன் நான். சங்க மண்டபத்திலுள்ள பொற்கிழியை என் அனுமதியின்றி யாரும் தொடக்கூடாது!

தி: சரி - அப்படியே. (போகிறான்)

த: அரசன் கருத்துக்கு இணங்கியது என்று அரசன் அறைந்தால் போதாதா? நீர் தடுப்பதேன்?

நமக்கென்ன உரிமை - சங்கத் தலைவராயினும்? நானும் போய்ச் சொல்லுகிறேன் அரசருக்கு.

ந: (கையைப் பிடித்து இழுத்து) நீ இரு, இங்கே!

த: ஏன்?

ந: சில கேட்கவேண்டும் உன்னை.

த: (நடுநடுங்கிக் கொண்டு) என்ன?

ந: அமர் இங்கே. நடுங்காதே, நான் கேட்கும் வினாக்களுக்கு விடை பகர வேண்டும்!

த: ஏதோ தெரிந்தது கூறுவேன்!

ந: இந்தப் பாட்டின் பொருளை அறிவாயா? விளக்கி யுரைப்பாயா?

த: உரைப்பேன்.

ந: இதென்ன துறை?

த: காதற் துறை.

ந: அகப்பாட்டு என்று சொல்லு. என்ன துறை?

த: நாணிக் கண் புதைத்தல்.

ந: காதலி கண் புதைத்திருக்கிறாளா?

த: வண்டோச்சி மருங்குதல்.

ந: வண்டோடு பேசற்கன்றோ நெருங்குகிறான்?— துரத்துவதாகக் கூறுகிறாயே நீ. அது துரப் போயிடின், அவன் வினாவுக்கு எப்படி விடைகூற முடியும்?

த: சேண் சென்று அறிந்து மீண்டு வந்து கூறுமாறு இரக்கிறான் அதனை!

ந: இதுவரை, அது ஒரு பூவினையும் அறியாதோ? இனித்தான் சென்றறிந்து வரவேண்டுமோ?— சிறைப்பட்டுக் கிடந்ததோ?

த: ஆம் - அவள் கூந்தலில் சிக்குண்டு கிடந்தது— குர்குர்ரென்று சத்தமிட்டுக் கொண்டு, அதனை விடுவித்ததும்...........

ந: (முழுங்கச் சிரித்து) அதனால்தான் அஞ்சிறைத் தும்பி என்றாயா - "அழகிய சிறையில் கிடந்த யானையே" என்று அழைக்கிறார்!

த: தும்பி என்றால் யானையல்ல!

ந: பின் என்ன?

த: இங்கே வண்டு.

ந: முதலடியை நன்கு நோக்கு. "கொங்கு தேர்"— நாற் படைகளில் ஒன்று. பின்னர் கூறுவது யானைப் படையன்றி வேறெதாயிருக்கும்?

த: ஆம் - யானைப் படை!

ந: தேர் எங்கே செய்யப் பட்டது? கூறுவாயா?

த: கொங்கு நாட்டில்!

ந: சரி. (நகைக்கிறார்) அதனை இயற்றியவர் யாவர் - கைகளைப் பற்றி - என்ன தெரிகிறது...நீள்கையா - தாழ்கையா .........

த: வாழ்க்கை - ஓங்கி வாழ்ந்த வாழ்க்கைகள்!

ந: சரி-அழகு, ஓங்கி என்று எப்படிக் கூறினை? அச்சமில்லா வாழ்க்கையரா?

த: ஆம் - அவர் தச்சர்தானே, போரில் வாரார் — நில்லார்

ந: அஞ்சு இறை என்ற அடை - அஞ்சுமியல்பினர் என்று காட்டுகிறதே?

த: இறைவனுக்கு அஞ்சுவர் - ஆதலால் அஞ்சிறை என்கிறது பாட்டு.

ந: சரி—“காமம் செப்பாது” என்பதின் பொருளோ.

த: காமத்தை யாரும் வெளியிட்டுச் செப்ப நாணு வர். மறுகி மறுகிச் சாகுவர் பெண்டிர் மட்டுமல்ல - ஆடவருமே. பாங்கனுடனும் கூறுன் தலைவன்

ந: ஆதலால் செப்பாது காமம். எது செப்பும்?

த: கண்களே செப்பும்

ந: ஆதலால்தான் “கண்டது மொழிமோ” என் றிருக்கிறதோ?

த: “கண்டது பொழிமோ” என்றிருப்பின் பொருள் சிறக்கும்.

ந: சரி - “கண்ணீர் பொழிமோ” என்று மாற்றிக் கொள்கிறேன். அரசன் ஔவாவிடில் ....

ந: அவர் புலமையினும் உம் புலமையே பெரிதாத லால் - பொழிமோ என்றே இருத்துக

ந: அது பின்னர்! ‘மயிலியல்’ - மயிலின் இயலைச் சிறிது கூறுக.

த: செய்யுள்தான் இயற்றத் தெரியாதென்றால், கண் காணும் பொருள்களை வர்ணிக்கத் தெரியா தா அடியேனுக்கு?

ந: மெய் கூறிவிட்டாய். இந்தப் பாட்டினை நீ எழுதவில்லை?

த: எழுதவில்லை.

ந: பொற்கிழி உனக்கெப்படி உரிமையாகும்? போ - உன் வீட்டிற்கு (எழுகிறார்)

த: அரசன் ஆணையை மீறுகின்றீரா நீர்?

ந: புரவலன் புலமையை ஒரு பொருட்டாக நீ மதியாமல், இகழ்ந்து, என் புலமையைப் புகழ்ந்தாய் நீயே...... ...

(பாண்டியன் வருகிறான்)

பா: என்னை இகழ்ந்தா?

த: வேந்தே, தடுக்கின்றார் சங்கத் தலைவர். இகழ்கின்றார் உம்மை..........

பா: ஆம் - நான் புகுந்தேன் - எழவில்லை. (சிரிக்கிறான்) என் காவலர் காப்பர் உன்னை - போ - பொற்கிழியை எடுத்துக் கொள், போ.

ந: அவன் எழுதிய பாடலல்ல அது. தானே ஒப்புக் கொள்கிறான்.

பா: சங்கத்திற்குக் கொணர்ந்தவன் அவனே. அஃதே போதும்.

ந: கிளி உளறுகிறது, பிறன் யாரோ கற்பித்த சொற்களை; கிளிக்குப் பொற்கிழியா?

பா: ஆம் - அதன் குரலினிமைக்காக பொற்கிழி!

ந: கிளிக்கு ஊட்டவேண்டுமாயின் ஒரு நற்பழம் கொடுக்கலாம். இது சங்க மண்டபம். நானே அரசன் இங்கே. உயிர் நீப்பினும்.........

பா: காவலர்காள், பிடித்துச் சிறை செய்க இப் புல்லனை. (மூவர் நுழைகின்றனர் - தயங்குகின்றனர்)

ந: அந்தப் பாட்டின் பொருளும் அறியான். தும்பியை வண்டு என்கிறான் ஒரு முறை-யானை என்கிறான் மறுமுறை. தன் மதம் நிறுவ அறிவில்லான் என் முன் நடுங்குவோன், அவை முன் யாது வல்லான்? பேதையன் - அறிவிலி - இவனுக்கோ பொற்கிழி?

பா: வாளுடன் வீணே நிற்கிறீர்களா - கோமழுகள் - சிறை செய்க இவனை! ஏமெட்டேடுகள் உரை நிறைத்தீர் இதற்கு. பிற பாடல்களுக்கு வழங்காப் புகழ் மொழிகள் அடுக்கினீர் இப்பாட்டிற்கு, எனக்கு விடுத்த சுவடிக் கட்டில். இப்பொழுது குற்றம் - காண்பதா? (காவலாட்கள் நற்கீரரைச் சூழ்ந்து கொள்கின்றனர்)

ந: என்ன குற்றம் என்பதைப் பொறுமையுடன் கேட்டருள்க! இம்மூவரும் சிவபிரானின் முக்கண் போல் தீப் பறக்க விழிப்பினும் நான் அஞ்சேன்! குற்றம் யாதெனின்............

பா: என்ன குற்றம்? பேசத் தெரியாத வண்டினைப் பேசச் சொல்வது ஒரு குற்றமோ? ஒவ்வொரு பூவின் மணம் ஒருவகைச் சிறப்புடைத்து - ஆத

லால் இது அதனினும் நல்லது-இவ்விரண்டினும் நல்லது எது - என்று ஒப்பும் உயர்வும் கூறுவது ஒரு பிழையோ?

ந: இவை குற்றமாகுமா, இறைவ? அவை புலவனின் கற்பனைத் திறம். கூந்தலுக்கும் மலர்போல ஏன் இயற்கைமணமிருக்கலாகாது? குற்றம் என்பேனே - பலகற்ற புலவனேன். (நகைக்கிருர்) குற்றம் யாதெனின்..........

பா: உன் மனத்தின் பொறாமை! தருமி! போய் எடுத்துக்கொள்! ஏழைப் பார்ப்பான்!

த: அங்ஙனே......... (போக)

ந: தருமி - தொட்டாயோ?......... (அவன் பின் போக)

பா: (காவலாட்களுக்கு) பிடித்துக் கட்டுங்கள் இவனை!

ந: ஆயிரம் பொன்தானே. ஏழைப் பார்ப்பானுக்கு உம் பொக்கிஷத்திலிருந்து ஆயிரம் பொன் கொடுக்கலாமே - ஏன் இந்தப் பொற்கிழியைத் தரவேண்டும்?

பா: (தருமிக்கு) ஏன் நிற்கிருய் — போ! எடுத்துக் கொள்!

த: புலவர் சீறுகிருரே.

ந: புலவர் சீறிப் பயனென்ன? கொடுங்கோல் இவனுடையது. தன் மனதிற்கு இணங்கிய பாட்டு

என்று அரசன் சொல்லிவிடுகிறது - உடனே அனைவரும் ஒப்புக்கொள்ள வேண்டும்! கிளி போல் அவன் சொன்னதை மிழற்ற வேண்டும், இனிய குரலில்! முன்னைய வேனிலில் தூக்கிய பொற்கிழி இது. ஓராண்டு ஆகிறது. இதுவரை அரசனுக்குத் தன் கருத்து யாதென்று தெரியாதிருந்தது. இன்று தெரிந்துவிட்டது. வேனிற் கால மயக்கம்!

பா: பிதற்றுதே கிரா. (தருமியை நோக்கி) பொற்கிழி வேண்டாமா உனக்கு, தருமி?

த: கலகமும் கலாமும் விளைவித்துக் கொண்டு எனக்கெதற்கு, ஐய?

பா: போய்ப் பார், உன் காதலி தேம்புவதை; என்னை இங்கு அழைக்க, அரண்மனைக்கு வந்தாள் அவளே. அவளைக் கண்ட பின்னேனும் பொற்கிழியை விழைவாய்!

த: கயற்கண்ணியா?........ஐய, புலவ என் பாடலல்ல என்று ஒப்புக்கொண்டேன் நானே. அரங்கேறாமலும் மன்றுபடாமலும் கிடந்த அரும் பாடல்கள் - மூலை முடுக்குகளில் முந்தையோர் வீசி எறிந்தனவற்றை எல்லாம் சங்கம் தொகுத்து நாட்டிற்கு உதவவேண்டும் என்பதே தன் கருத்து என்று மன்னர் கூறினர், பூஞ்சோலையில் ஏழு நாள் முன்னர். ஆதலால்தான் நான் கொணர்ந்தேன் இதனைச் சங்கத்தாரிடம். சங்கம் மறுக்கிறது. (போகிறான்)

ந: உம் கருத்து, அதோ, மன்ன?

பா: ஆம் - பல்லாயிரப் பாடல்கள் குவிந்து விட்டன. நான் பொற்கிழி கட்டிய கருத்து முற்றிற்று. கிடைத்த பாக்களை எல்லாம் தொகுத்து - பல் வகைத் தொகைகளாக்கி, உரையும் எழுதுதல் வேண்டும் சங்கப் புலவர். பெரும்பணி உள்ளது. ஆதலால் புதுப்பாடல்கள் போதும் - பழையன போற்றுவோம்.

ந: ஆதலால், பொற்கிழியை இறக்கிவிடத் திரு உளமோ? (நகைக்கிருர்) நான் சொன்ன கொடுங் கோல்!

பா: கொடுங்கோல்-பொற்கிழி தாங்கிய வளைகோலே-பார், இதனை. (ஒரு ஓலையை நீட்ட)

ந: (வாங்கிக் கொண்டு) மீன் முத்திரை யுள்ளது (சிரிக்கிருர்)

பா: ஏன் சிரிக்கிருய்? ஆன், மான் - என்ற எதுகைச் சொல் தோன்றிற்ருே?

ந: ஆம், ஐய, பேன் என்ற சொல்லும் உளதே.

பா: கூந்தலைப் பற்றிய பாட்டாதலால், பேன் கருத்தில் உதித்தது உனக்கு. கூந்தலின் மணம் அதனுள் மறைந்த பேனின் நாற்றம் என்று பொருள் காணப் புகுந்தாயோ?

ந: மலரணிந்த கூந்தலுக்கு பேன் உண்டா, நான் அறியேன். என்ன உள்ளது இந்த ஓலையில் - எனக்கு ஆணையா? சிறைக்கு என்னை நடத்த

ஏவும் ஆணையா? நான் தயார், புறப்படு! அரசர் சிறியதற்குத் தண்டனையா?

பா: திறந்து பார் நீயே. அரசனை நீ சிறினல்........

ந: (வாங்கிக்கொண்டு) என்ன இருக்கும். சொல்லட்டுமா? "மகளிர் கூந்தலுக்கு இயற்கையே மணமுண்டோ? மலரைச் சார்ந்து பெற்ற மணமேயோ? - யாரேனும் புலவனுண்டோ, இயற்கையே என்று கூற?"...... என்று (சிரிக்கிருர்)

பா: இந்தப் பாட்டில் போலவே, எனக்கும் கருத்து தோன்றிற்று என்பது நேருவதொன்ரு? அப்படியே நேரினும் மக்கள் நம்புவரா? பிரித்துப் படி நீ.

ந: (பிரித்துப் படிக்கிருர்)

"அகப்பொருட் துறையினில் சீரிய ஒழுக்கம்,
சிறிய ஓர் பாட்டினில் உயர்ந்த கற்பனை,
நாடகப் புதுமையில் இயற்கைக்கு ஒப்பு,
மானிட மாண்புடன் வற்ரு உவகை -
இணையளட்டும் மணக்கும் செந்தமிழ்க்
கனியொன்று அளித்திரோ வேட்கைநான் தீரவே?"

மன்ன, இந்த ஒரு புது இலக்கணத்திற்கு ஒத்தது பாடல் இது என்று நினைத்தியோ?

பா: இதோ, - எனக்கு அப் பாட்டொடு நீரே உய்த்த விசேஷ உரை கொணர்ந்துளேன் (நீட்டுகிருன்)

ந: எனக்குத் தெரியாதா, மீண்டும் நான் படித்திலேன்?

பா: சென்ற ஆண்டு நான் முத்திரையிட்டு வைத்தது இது. எனது அற்றைநாட் கருத்துக்கு இணங்க வில்லையா இந்தக் கொங்குதேர் பாடல்? பொற் கிழி அவனுக்கு அளித்தது பிழையா? நக்கீர, கொடுங்கோலனா நான்?

ந: பிழை தான். குற்றம் குற்றமே! (சிரிக்கிறார்)

பா: இன்னும் வீம்பா?

ந: அவனுக்கு அளித்தது பிழை - பொற்கிழியை நீயே எடுத்துக் கொள்ளல் வேண்டும் (நகைக்கி றார்)

பா: எனது பொன் என்றா?

ந: ஆம், மன்ன.

பா: என் பொக்கிஷத்திலிருந்து எடுத்துக் கிழியாய்த் தூக்கிய பொன் என்றா?

ந: வேந்தருமக்கு உவச்சர் பலர் உளர் - நீ எழுதும் எழுத்தாணிக் கையெழுத்தை நாம் அடிக்கடி காணுதல் அரிதாகிறது. - ஆனால் இது தெளிவு ........பாரிங்கே, தகரத்தையும், நகரத்தையும் மகரத்தையும்...........

பா: ஐயோ, பயமாயிருக்கிறதே!! முதலையா, மீனா? (சிரிக்கிறான்)

ந: உன் எழுதுகோல் ஒரு சுண்டு சுண்டிக் கிறுக்கு தலும் கீறுதலும்...........

பா: விந்தை! எழுத்து,சொல், பொருள், யாப்பு, அணி- இவ் ஐந்தையே கூர்ந்து பார்க்கும் கண்ணுடைய

புலவன் நீ - வெளிப் போர்வையின் சித்திரத்தை யும் நினைவு இருத்தியுளாயே........கண்டு பிடித்து விட்டாயே கள்வனை! பொற்கிழி எனதே ஆயின் தருமிக்கு நான் கொடுக்க உரிமையுள்ளேன்-ஆத லால் அவனை ஏவினேன்! (சிரிக்கிருன்)

ந: சரி, எடுத்துக்கொள்க தருமி. கிளியே, போ, கொத்திக்கொள் பழத்தை.

பா: தருமி! (உரக்க) தருமி! (காவலரிடம்) கொணர்க அவனை விரைவில். (காவலர் போகின் றனர்)

ந: என்னே உன் புலமை மன்ன! மலர்கள் நிபுண ஞய் வண்டினை நினைத்ததும், அவ்வண்டினை விளிக்கிற நாடகத் திறனும், பொய்ச் சாட்சி வேண்டா நீதி, மாண்பும், காதலி அழகைப் புனைந்த ஓவியமும், அவள் கூந்தலை மெச்சும் சாது ரிய விரகும், சொற் செட்டும் பொருட் செறி வும், இப் பாட்டில் - ஆ! சங்கத் தலைவனுக நீயே அமர்தற்குத் தகும்.

பா: நான் நாட்டுத் தலைவன், போதாதா? ஆனுல் சங்க மண்டபத்தில் என் ஆணை செல்லாமல் தடுத்த தலைவன் நீ (நகைக்கிருன்)

ந: பொறுத்தி என்னை, (வணங்குகிருர்) புரையி லாப் புலமையோய்!

பா: முன்னை வேனிலிலேயே என் அரசியின் கூந்தல் மணத்தைக் கண்டு மயங்கினேன் உள்ளம். அப் பொழுது பாட வந்திலது வாய்க்கு. சென்ற

வாரம், காதலரிருவரைக் கண்டதும் நான் கண்டதை மொழிந்த பாட்டேயிது. பெருமை என்ன இதிலே?

ந: செய்யுட்கள் சிந்திக் கிடக்கின்றன உலகெங்கணும் இது போல். அதைக் கண்டு துய்ப்பதோடு இல்லாமல், சொல்லாலும் செப்புவதே புலமை. துய்ப்போன்-துய்யோன், புகல்வோன்-புலவோன்.

பா: துய்த்தான் தருமி. தருமியும் கண்ணியுமே இப் பாட்டினை வித்தியவர் - ஆதலால் பொற்கிழி அவனுக்கு.

(தருமி வருகிறான்)

த: ஐய, புலவோய், பிள்ளை மதியேனை அழைத் திரோ?

ந. வருக பிள்ளாய்! பொலிக உம் இல்லறம்! பொற் கிழியை எடுத்துக் கொள் கிள்ளாய்! (சிரிக்க)

த: நான் எழுதியதல்ல அது.

ந: குற்றமில்லை, எழுதியது யார் என்று தெரியும் எனக்கு. (நகைத்து) இதோ - உன் பெயரை அடித்துவிட்டு வேறு பெயரைக் குறிக்கப் போகி றேன் பாட்டின் கீழே!

த: இறைவன் அருளியது, போ. — பூஞ்சோலை யில் கிடந்தது தரையில்!

ந: இறைவன் அருளியதே, போ.

த: பனை ஏட்டில், இறைவனார் என்று குறித்ததற்கு நாணினேன்.

பா: இறையனார் என்று பொறித்திடுக, நக்கீர! தருமி, அதோ பார் - கயற்கண்ணி நிற்கிறாள் - கண்ணிலுள்ள நீரைக் கலக்குகிறது, அவளது கண் மீன்கள், பொழிகிறது.......... (இழுத்துக் கொண்டு போகிறான்)

ந: அதிலும் குற்றம் காண்போர் காண்க. நான் புலமையே காண்கிறேன். திசை நோக்கித் தொழுகிறேன் மன்னனை. (நக்கீரர் தொழுகிறார். திடுமென, பாண்டியன் நுழைகிறான். தொழுவதை பார்த்துவிட்டான்)

பா: என்ன நக்கீர! கிளியும் காதலியும் மகிழ்க என்று வந்துவிட்டேன் மீண்டும்! என்ன தயங்குகிறாய்? சொல், என்னிடம் தயங்காமல்!

ந: இறையனார் என்ற பெயர் குறிப்பின் - வருங்காலத்தில் - கடவுளோ- முக்கட்சிவனோ - செங்கண் மாலோ - குறிஞ்சி முருகனோ- மானிட உருவிலே தோன்றி எழுதினார் இந்தச் செய்யுளை என்று ஒரு வரலாறு எழுந்தால்? உன் சிறப்பும் புகழும் போய்விட்டால்?

பா: புலவர்கள் பாடல்கள் எழுதுவது எதனால்? அவரே அறியார். இறைவனார் உள்ளிருந்து இயக்குதலாலன்றோ? அந்தப் பாட்டை நான் தான் எழுதினேனா என்று - இந்த ஏழு நாளும் வியந்து வியந்து....... ஆ......கடவுளே எழுதினார். காதலரும் காட்சியும் - எல்லாம்பொருந்த அருளிய கடவுளே.

ந: எலினும் - சிறு பாநத் தொகுதியில் உனது பாடலேயே முதலில் வைப்போம்.

பா: கடவுள் வாழ்த்தாகவா? தமிழ்க் கடவுள் முருகப் பிரானையன்றோ முதலில்?

ந: சரி - சேய்குன்றம் பாடிய பின்னர் - இரண்டாம் செய்யுளாக...........

(திரை)

நாவலர் பவர் பிரஸ், காரைக்குடி.